REGD. No. TN MS (C) 244 ✻ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 6 பக்கம் விலை 40 காசு

**மனம்**

எல்லா உலகங்களை யும்விட பெரிது மனிதமனம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**மொழி**

எந்த ஒரு மொழி யின் சிறப்பும் பெரும் பாலும் அம்மொழி யின் மூலம் அறியக் கிடக்கும் கருத்துக் களைப் பொறுத்துத் தான் இருக்கும்.

தந்தை பெரியார்

● மலர் 5 சென்னை 9—6—1981 செவ்வாய் வெளியூர் 10—6—1981 புதன் இதழ் 230 ●

## வாருங்கள்! வந்து கூடுங்கள்!

### ப.உ.ச. கடிதம்

பேரன்புடையீர்,

அண்ணன் வழி நடக்கும் மன்னன் பேரில் அமைந்துள்ள மன்றங்களின் மாநாடு வரும் சனி ஞாயிறு ஆகிய (ஜூன் 13,14) நாட்களில் சேலத்தில் நடக்க இருப்பது நீங்கள் அறியாததல்ல!

நண்பர்கள் முசிறிப்புத்தனும், சௌந்தரராசனும் சிறப்பான முறையில் மாநாடு அமைய சேலத்திலேயே தங்கி கழக மாவட்டச் செயலாளர் மற்றும் அம்மாவட்டத்தில் உள்ள சட்ட மன்ற உறுப்பினர்கள், நம் கழகக் காவலர்கள் துணையோடு! இரவு பகலாக பணியாற்றுகிறார்கள் என்று செய்திகள் வருகின்றன.

உருக்கமாகவும், அதே நேரத்தில் சுருக்கமாகவும் உரையாற்றும் கழகத் தலைவர்கள் அனைவரும் வருகின்றனராம்! உருக்கமாக—என்றெழுதுகிறாயே அப்படியென்றால் கனல்தெறிக்கும் பேருரைகள் இல்லையா என்று ஆவலோடு நீங்கள் நினைப்பது போல் நானும் நினைத்தேன்! பயமறியா படையினர் முன் உரையாற்ற வரும் தளபதிகளின் பேச்சில் வீரத்திற்கு எப்படிப் பஞ்சமிருக்க முடியும் என்று என்னைத் திரும்பக் கேட்டார் நண்பர் முசிறி. எனவே 'வீரஉலா' ஒலிக்கும் என்று திட்டமாகத் தெரிகிறது!

தாய்வீட்டில் இழந்துவிட்ட மரியாதையை ஈடு செய்ய மாமியார் வீட்டுக்கு வந்து விருந்து சாப்பிட்டு, தாய் வீட்டை அச்சுறுத்துவோர் மாநாடல்ல இது! தாயைக்காக்கும் தனயர்கள் கூடி, கலந்துரையாடி வழிவகை காண உள்ளனர்!

கூடுகின்ற நேரம் அரசியல் வானில் நூலில்லாத பட்டங்களைப் பறக்கவிட்டு 'ஏதோ அவைகளெல்லாம் நம் தலை மீது பறக்கிற 'ராக்கெட்டுகள்' என்று எண்ணி நம்மை பயமுறுத்தும் பைத்தியக்காரர்கள் முணு முணுத்துக் கொண்டிருக்கும் நேரம்!

நாம் பயணம் செய்வது ஓட்டைப் படகும் அல்ல! நீந்திடும் கடலிலும் 'திமிங்கிலமும்' இல்லை!

அப்படியே ஏதேனும் நம் எதிரிகள் எண்ணுவதுபோல் விபத்து ஏற்பட்டாலும் கரை சேர முடியாதவர்கள் அல்ல நாம்! சேர்ந்ததும் கடலில் நீந்தும் துணிச்சல் நமக்குத் தான் உண்டென்பதை மீண்டும் நிரூபிக்கத் துடிக்கும் இளைஞர்கள் பட்டாளம் சேலத்தில் கூடுகிறது!

சேலத்தில் கூடுகிற இளைஞர்கள் கழகமெனும்

(3-ம் பக்கம் பார்க்க)

# தமிழகத்தில் நவீன முறைகளில் மின் உற்பத்தியை அதிகரிக்கத் திட்டம்

## அமைச்சர் பண்ருட்டி தகவல்

**சென்னை, ஜூன். 9- தமிழகத்தில் நவீன முறைப்படி, மின்சார உற்பத்தியை அதிகரிக்கத் திட்டம் உள்ளது என்று வெளிநாடு சென்ற மின்சாரத் துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தெரிவித்தார்.**

மின்சாரத்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் இங்கிலாந்து, மேற்கு ஜெர்மன், பிரான்சு, ஹாலந்து ஆகிய நாடுகளுக்குச் சென்றார். அவருடன் தமிழ்நாடு மின் வாரியத் தலைவர் பி. முராரியும் சென்றிருந்தார்.

இங்கிலாந்துக்கு சென்றிருந்தபோது, மின் உற்பத்திக்குப் புதிய உத்திகளைப் பயன்படுத்துவது குறித்து ஆலோசனை நடத்தினார்கள். அங்கு மின் உற்பத்தி முறைகளையும், மின்சாரக் கருவிகள் உற்பத்தி தொழிற் சாலைகளையும் பார்வையிட்டனர். இங்கிலாந்து நாடாளுமன்றத்தையும் பார்வையிட்டனர்.

இங்கிலாந்துப் பயணம் குறித்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:-

இங்கிலாந்திலுள்ள மின் உற்பத்தி திட்டத்தைப் பார்வையிட்டோம் அதைப் பார்த்த பின் இங்குள்ள காற்றாடி மின் திட்டம் (விண்ட் மில்) தமிழ்நாட்டில் பயன்படுத்தக்கூடியதாக உள்ளது. நீர்பாசனத் திட்டத்துக்கு இந்த மின்சாரத்தைப் பயன்படுத்தலாம். என உணர்கிறோம்.

500 மெகாவாட், 600 மெகாவாட் அதிக உச்ச மின்உற்பத்தி நிலையங்கள் இங்கிலாந்தில் நல்லமுறையில் செயல்படுகின்றன. இங்கிலாந்து அனுபவங்கள் தமிழக மின்உற்பத்தியைப் பெருக்க உதவிகரமாக உள்ளன.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராசந்மச்திரன் கூறினார்.

### வெளிநாடு சென்று திரும்பிய அமைச்சர்

## பண்ருட்டிக்கு மாலை அணிவித்து முதல்வர் வரவேற்பு

**சென்னை, ஜூன். 9- வெளிநாடு சென்று திரும்பிய அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு மாலை அணிவித்து விமான நிலையத்தில் வரவேற்றார் முதல்வர்.**

இங்கிலாந்து நாட்டின் அழைப்பின் பேரில் கடந்த மாதம் 18ந் தேதியன்று சுற்றுப்பயணம் மேற்கொண்ட தமிழகமின்துறை அமைச்சர்பண்ருட்டிராமச்சந்திரன்இன்றுகாலை 10.15 மணிக்கு தாயகம் திரும்பினார்.

விமான நிலையத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் மாலை அணிவித்து அமைச்சர் ராமச்சந்திரனை வரவேற்றார்.

நிதியமைச்சர் நாவலர், கழக பொதுச்செயலாளர் ப. உ. ச., சபாநாயகர் ராசாராம், அமைச்சர்கள் கே. ஏ. கே., எஸ்.டி,எஸ்., ராகவானந்தம், ஹண்டே பொன்னையன், திருநாவுக்கரசு, முத்துசாமி ஆகியோர் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு மாலை அணிவித்துவரவேற்றனர்.

மோகனரங்கம் எம்.பி., சட்டமன்ற உறுப்பினர்கள் சேதுராமன், அப்துல்ரசாக் டி. அன்பழகன், செம்மலை சமரசம், வெள்ளைச்சாமி நான்சில் வின்சென்ட், பிரபாகரன், சேலம்ஆறுமுகம் கலிதீர்த்தான், ஜெகத்ரட்சகன், சக்கரபாணி, குலசேகரபாண்டியன் குப்புசாமி, சின்னராசு தங்கராசு ஆகியோர் விமான நிலையத்தில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனை வரவேற்றனர்.

கோ-ஆப்டெக்ஸ் ஆலோசனைக் குழு தலைவர் அனகாபுத்தூர்ராமலிங்கம் எம்.எல்.சி., இரா.ஜனார்த்தனம் எம்.எல்.சி., கழக தொழிற்சங்க பிரிவு செயலாளர் வை. பெருமாள், தலைமைக் கழகம் துரை, சாமிநாதன், தண்டபாணி தி. நகர் மூர்த்தி, கு. க. செல்வம், சி. ஜெயபால் சைதை துரைசாமி, சாலிகிராமம் துரையரசன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி கஜேந்திர பாபு, கே. எல்லப்பன், பிள்ளைபாக்கம் மூர்த்தி, போந்தூர் மணி. சென்னை செங்கை மாவட்ட அறங்காவலர் குழு தலைவர் வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு, சிதம்பரம் பன்னீர்செல்வம், காவேரிபட்டினம் வேணுகோபால்

மின்வாரியத்தோழர்கள் தம்புசாமி, நடராசன், ரத்தினவேல் சீனிவாசன், துரைராஜ், அந்தோணிசாமி, ராமச்சந்திரன், கதிர்வேலு, அங்கப்பன், சண்முகம், சந்திரபோஸ்

ஹீராசந்த் எம்.பி.ராஜாராம் ரெட்டியார், சீனிவாசன், குறிஞ்சிப்பாடி நட்சிணாமூர்த்தி, ரங்கநாதன், சிவமணி, குப்புசாமி, பட்டாபி, சந்திரன் சின்னசாமி, ரகுபதி ஆகியோர் மற்றும் பலலாயிரக் கணக்கான கழகத்தோழர்கள் விமான நிலயத்திற்கு திரண்டு வந்து மாலைகள் அணிவித்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு மாபெரும் வரவேற்பு அளித்தனர்.

## திருப்பத்தூர் தேர்தல்: தி. மு. க. ஓட்டம்

மதுரை, ஜூன் 9— திருப்பத்தூர் சட்டமன்ற இடைத் தேர்தலில் தி. மு. க. போட்டியிடவே இடாது என மதுரையில் மனோகரன் கூறினார்.

இந்திராகாங்கிரஸ் கட்சி திருப்பத்தூர் தேர்தலில் தனித்து போட்டியிட்டாலும்கூட தி.மு.க.இந்திரா காங்கிரசுக்கே ஆதரவு தரும் என்றும், அவர் மேலும் கூறினார்.

கட்சித்தலைவர் கருணாநிதியும் கட்சி நிர்வாகக் குழுவும் இந்த முடிவை எடுத்துள்ளதாகவும் மனோகரன் மேலும் கூறினார்.

### வலம்புரிஜான் முன்னிலையில்

## கழகத்தில் இணைந்த இ. காங்கிரசார்

சென்னை, ஜூன் 9— தாம்பரம் இளைஞர் காங்கிரஸ் பிரிவில் தீவிரமாக செயல்பட்டு வந்த புலவர் ராஜகோபால், புலவர் அன்பு ஆகிய இருவரும் அக்கட்சியிலிருந்து விலகி வலம்புரி ஜான் பேசிய கழகக்கூட்டத்தில் கழகத்தில் இணைந்தனர். அவர்கள் இருவரையும் கழகத்தில் இணைக்க பெருமுயற்சி செய்தபுலவர்ஏ.சு.மணியை வலம்புரி ஜான் பாராட்டினார்.

## ஓராண்டு சாதனை

-4ம் பக்கம்

## அமெரிக்கத் தமிழ் மாநாட்டில் கண்ணதாசன் கலந்துகொள்கிறார்

சென்னை, ஜூன் 9— அமெரிக்காவில் தமிழ் மாநாடு வரும் ஜூலை மாதம் நடைபெறவிருக்கிறது.

மிச்சிகான் பகுதி டிராய் நகரில் நடக்கும் இந்த மாநாட்டில் பல்வேறு நாடுகளிலிருந்தும் 10 தமிழ் சங்கங்களைச் சேர்ந்த 2 ஆயிரத்துக்கும் மேற்பட்ட தமிழறிஞர்கள் கலந்து கொள்ளுகிறார்கள்.

தமிழகத்திலிருந்து 8 தமிழ் புலவர்கள் இந்த மாநாட்டுக்குச் செல்கிறார்கள் இங்கிலாந்து மற்றும் ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலிருந்தும் ஏராளமான தமிழர்கள் கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தமிழக அரசு கவிஞர் கண்ணதாசன் டாக்டர் வி. எம் சேதுராமன் ஆகியோர்களும் மாநாட்டில் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றவிருக்கிறார்கள்.

மிச்சிகானில் உள்ள தமிழ்சங்கம் இதற்கான ஏற்பாடுகளை செய்து வருகிறது. மாநாட்டை சித்தரிக்கும் "கதம்பம்" என்கிற சிறப்புமலரின் ஆசிரியர் டி. மதனகோபால் நேற்று சென்னையில் இந்த தகவல்களை நிருபர்களிடம் தெரிவித்தார். ஒவ்வொரு ஆண்டிலும் அமெரிக்காவில் தமிழ்மாநாட்டை நடத்துவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருவதாகவும் மதனகோபால் தெரிவித்தார்.

## பல்லாண்டு காலம் நல்லாட்சி வாழ்க!

(புரட்சித்தலைவர் அரசு மீண்டும் பொறுப்பேற்ற ஓராண்டு நிறைவு சிறப்புக் கவிதை)

-:கவிஞர் மணிமொழி:-

அண்ணாவின் நல்லாட்சித் தேரை யோட்டி
அற்புதஞ்சூழ் தமிழ்நாட்டைப் படைத்துக் காக்கும்
கண்ணான தலைவா நின் கீர்த்தி பாடிக்
காவியங்கள் செய்யட்டும் கவிஞர் கூட்டம்!
புண்ணான நெஞ்சத்தால் பொறாமைத் தீயில்
பொசுங்கிப்போய் புகைச்சலினை எழுப்புவோரை
மண்ணாக்கிப் போட்டுவிட்டு நீநடப் பாய்
மணித்தமிழர் உன்பின்னே தொடர்ந்திருப்பார்!

ஊறுகளோ இடையிடையே வந்துபோகும்
உண்மையறிந் தோர்அதனை 'இடையூறெ'ன்பார்!
மாறுபட்டோர் கோள்மூட்டிக் கொண்டிருப்பார்
மாறுதலை மக்களன்றோ செய்யவேண்டும்?
கூறுகெட்ட மானிடரின் பிரச்சாரத்தால்
குலைந்திடுமா கொள்கைக்கூ டாரமிங்கே?
நேர்மைகெட்டுப் போவதில்லை எந்தநாளும்
நீதிமான்கள் கீர்த்திக்குக் களங்கமில்லை!

இல்லார்க்கு வாழ்வளிக்கும் இனிய திட்டம்
ஏழையரை மேலேற்றும் புதிய சட்டம்
எல்லார்க்கும் வசதிவாய்ப்பு அமைவதற்கே
எப்போதும் உழைத்துவரும் சீர்செயல்கள்!
வல்லதுறை அறிஞரெலாம் வாழ்த்திப் போற்றும்
வரலாற்று நாயகராம் அண்ணா கண்ட
நல்லாட்சி நம்புரட்சித் தலைவ ரேற்ற
நாட்டாட்சி தமிழாட்சி! தமிழராட்சி!

பட்டமரம் போலிருக்கும் தமிழர் வாழ்வை
பார்போற்றச் செய்பவரைக் கவிழ்க்கின்றாராம்
கட்டுமரக் கூட்டத்தைக் கவிழ்ப்பதற்கே
கடற்பாசி சதித்திட்டம் தீட்டுதிங்கே;
வெட்டரிவாள் கூர்பார்க்க வேண்டுமென்றே
வெண்டைக்காய் சுண்டைக்காய் அணிவகுப்பாம்!
முட்டாள்கள் பாறையிலே மோதுகின்றார்
மூக்குடைந்து சாகட்டும் அனுதாபங்கள்!

'காரிருளால் கதிரவன்தான் மறைவதுண்டோ?
கறைச் சேற்றால் தாமரையின் வாசம்போமோ?'—
பாரதிக்குத் தாசனாகி இலக்கியங்கள்
படைத்தவராம் பாவேந்தர் எழுச்சிப்பாட்டில்
கூறியதை நாமுணர்ந்து மலர்ச்சிரிப்பைக்
கொட்டிவிட்டுப் பயணங்கள் தொடரவேண்டும்!
நேரெதிர்த்து நிற்பதற்கு எவனுமில்லை
நல்லவரை எதிர்ப்பதற்கு எமனுமில்லை!

எதிர்ப்பையெலாம் தூளாக்கிப் போட்டுவிட்டு
ஏறுநடை யோடுமுன் னேறிச் செல்வாய்!
உதிர்ந்துவிழும் பகைச்சருகில் கால்பதிக்கும்
உத்வேகப் புயலாய்நீ மாறவேண்டும்!
கதிர்ப்பிழம்பின் கற்றையொளி முகமலர்ந்து
கடுகிவரும் பகையடக்கிப் பாய்ச்சல்காட்டி
நதிநீரின் நடைவேகம் முடுக்கி வா!வா!
நாயகனே வருங்காலம் நம்பொற்காலம்!

புற்றீசல் கிளம்பிவந்தா விளக்கணைக்கும்?
பூச்சிகளா வைரத்தூண் அசைத்துப்பார்க்கும்?
குற்றவாளி யாநீதித் தராசெடுப்பான்?
கூன்கிழங்கள் குன்றெதிர்க்க வருவதுண்டா?
வெற்றிமகன் உனைஎதிர்த்துப் போட்டிப்போட
வெத்துவேட்டுப் பயல்களுக்குத் துணிவுமுண்டா?
கொற்றவனை குலவாழை தழைப்பதற்கே
கொடிக்காலாய் இருக்கின்றாய் வெல்க! வாழ்க!

கோடான கோடிமக்கள் இதயத்துள்ளே
கோயிலாகி; கொலுவிருக்கும் தெய்வமாகி
வாடாமல் வதங்காமல் மணம்பரப்பி
வாழ்கின்றாய் வள்ளல்மனச் செம்மலேநீ
நாடாமல் உனைநாடி நாட்டு மக்கள்
நாடோறும் வருகின்றார்; உன்னைவாழ்த்திப்
பாடாத மனமில்லை கவிதையில்லை
பல்லாண்டு நல்லாட்சி வாழ்க! வாழ்க!

வெளிநாடு சென்று வெற்றியுடன் திரும்பும்
அண்ணாவின் அன்புத் தம்பியே!
புரட்சித்தலைவரின் இதயக்கனியே!
மாண்புமிகு மின்துறை அமைச்சரே,
வருக! வருக!! வருக!!!



தந்தை பெரியார் போக்குவரத்துக்கழக
அண்ணா தொழிலாளர்கள் சங்கம்
தலைமை அலுவலகம்,
விழுப்புரம், தெ. ஆ. மாவட்டம்.

---

வெளிநாட்டுப் பயணம் வெற்றியுடன் முடித்து
தாயகம் திரும்பும்
எங்கள் அமைச்சர் மாண்புமிகு பண்ருட்டியார் அவர்களே
வருக! வருக!
அன்பன்,
C. இராமநாதன் Ex., M.L.A.
தெ.ஆ. மாவட்ட கழக துணைச்செயலாளர்
கீரனூர், விருத்தாசலம்

—கடலூர் நிருபர்

---

தாயகம் திரும்பும் புரட்சித்தலைவரின்
அன்புத் தம்பியே வருக! வருக!
மாண்புமிகு மின்துறை அமைச்சரே, வருக! வருக!
•
ஐ. எம். மாலிக்,
மாவட்ட கழக பிரதிநிதி,
நெல்லிக்குப்பம்

---

வெளிநாடு பயணம் முடித்து தாயகம் திரும்பும்
புரட்சித்தலைவரின் புனித இளவலே வருக! வருக!!
V. இராமச்சந்திரன்,
கழக ஒன்றிய அவைத்தலைவர்
அன்பு. தண்டபாணி,
கழக ஒன்றியச் செயலாளர்
கடலூர்.

---

வெளிநாடு பயணத்தை முடித்து தமிழகம் திரும்பும்
எங்கள் அன்பு அண்ணன் மாண்புமிகு "பண்ருட்டியார்"
அவர்களே, வருக! வருக!!
P. மோகன் B.A.
கழக ஒன்றிய செயலாளர்,
கச்சராயப் பாளையம்
சின்னசேலம் ஒன்றியம்

---

வெளிநாடு பயணம் இனிது முடித்து தாயகம் திரும்பும்
புரட்சித்தலைவரின் அன்புத்தம்பி
எங்கள் அமைச்சர் மாண்புமிகு பண்ருட்டியார்
அவர்களே வருக! வருக!
அன்பன்,
க. கலைமணி B. E.,
கிள்ளை பேரூராட்சி மன்ற கழக முன்னாள் தலைவர்
கிள்ளை தெ. ஆ. மாவட்டம்

---

வெளிநாடு பயணத்தை வெற்றியுடன் முடித்து
தாயகம் திரும்பும்
புரட்சித்தலைவரின் அன்புத்தம்பி மாண்புமிகு
மின்துறை அமைச்சர் அவர்களே
வருக! வருக!
Dr A. சண்முகம்
M.H.S; M.D.H; M.T.I.M.B.
(Regd 9397) மெடிகல் பிராக்டிகல்;
சாந்தி மெடிகல் ஹோம்,
ஆஸ்பிட்டல் ரோடு
பண்ருட்டி- 607106

---

அயல்நாட்டுப் பயணம் முடித்து தாயகம் திரும்பும்
எங்கள் அண்ணன் மாண்புமிகு
"பண்ருட்டியார்" அவர்களே, வருக! வருக!!
என உளமார வரவேற்கின்றோம்
❀
"சின்ன சேலம்"
M. சுப்பிரமணியன் Ex M.L.A.
கழக வழக்கறிஞர்
கழக ஒன்றிய செயலாளர்
முடியனூர், தியாகதுருகம்

---

வெளிநாடு பயணம் வெற்றியுடன் முடித்து
தமிழகம் திரும்பும் எங்கள் மாண்புமிகு
அமைச்சரே வருக!
தமிழகம் போற்றும் ஒப்பற்ற திறமையால்
புரட்சித்தலைவரின் இதயத்துக்கனியான
பொதுவாழ்வில் புனிதர்
எங்கள் அண்ணன் மாண்புமிகு
பண்ருட்டியார் அவர்களே வருக! வருக!
கே. சந்திரன்
நகரகழக துணைச் செயலாளர்
குறிஞ்சிப்பாடி

---

வெளிநாடுபயணம் முடித்து தாயகம் திரும்பி உள்ள
அண்ணாவின் வழிவந்த புரட்சித்தலைவரின்
அன்புத்தம்பியே, வருக! வருக!!
தமிழகம் அனைத்து துறையிலும்
முன்னேற்றம் காண புரட்சித்தலைவருக்கு
துணையாக பொதுவாழ்வில் இருக்கும்
புனிதரே, வருக! வருக!!



P. K.
லோகநாதன்,
மாநில
கழகச் செயலாளர்,
புதுவை மாநிலம்

---

வெளிநாடு பயணம் முடித்து தாயகம் திரும்பும்
எங்கள் அண்ணன் மாண்புமிகு
"பண்ருட்டியார்" அவர்களே
வருக! வருக!!
★
ப. வைத்திநாதசாமி,
கழக நகர செயலாளர்
சேத்தியாதோப்பு தெ. ஆ. மாவட்டம்.

---

வெளிநாட்டுப் பயணம் முடித்து தமிழகம் திரும்பிவரும்
புரட்சித்தலைவரின் அன்புத் தம்பியே, வருக! வருக!!
எல்லோருக்கும் இனியவர்; ஏழை எளியோர்க்கு உதவுபவர்;
பொது வாழ்வில் புனிதர்; பொருளாதார நிபுணர்;
நிறைவான பேச்சால் தாங்கள் நெருக்கமுடன்
பழகி வரும் எங்கள் அன்பான மாண்புமிகு மின்துறை
அமைச்சரே வருக! வருக!!
★
எம். அரங்கநாதன்
தெ. ஆ. மாவட்ட பிரதிநிதி,
அவைத்தலைவர், அண்ணா நற்பணி மன்றம்
பெருமாத்தூரான் வீடு, குறிஞ்சிப்பாடி.
(போன்: 77)

---

அயல் நாட்டுப் பயணத்தை வெற்றியுடன்
முடித்து தமிழகம் திரும்பும் எங்கள் இதய தெய்வம்
புரட்சித்தலைவரின் இதயக்கனி,
எங்களின் அன்பு அண்ணன், மாண்புமிகு
பண்ருட்டியார் அவர்களே, வருக! வருக!!
★
அன்புத் தொண்டன்
துரை. அன்பரசன்
தெ. ஆ. மாவட்ட கழக துணைச் செயலாளர்,
நெல்லிக்குப்பம்

---

தமிழக வளர்ச்சியில் பொருளாளராகி
பொறுப்புடன் மக்களின் குறைபோக்கிடும் அமைச்சராகி
எங்கள் இதயக்கனி
எழில்வேந்தன் ஏற்றமிகு உள்ளத்தில் இடம்கொண்ட
இணையில்லா மாண்புமிகு மின்துறை அமைச்சர் அவர்களே
தாயகம் திரும்பும்
உங்களை அன்போடு வரவேற்கிறேன்
வருக! வருக!
இராம ஆதிமூலம்
மாவட்ட துணைச் செயலாளர்
தெ. ஆ. மாவட்ட எம். ஜி. ஆர். மன்றம்
மேலவீதி, சிதம்பரம்

---

வெளிநாடு பயணத்தை வெற்றியுடன் முடித்து
தாயகம் திரும்பும் எங்கள் அன்பு அண்ணன்
மாண்புமிகு மின்துறை அமைச்சர் அவர்களே.
வருக! வருக!!
A. ரகுபதி
கழக நகரச் செயலாளர்,
கடலூர்.

---

தமிழக பொருளாதார வளர்ச்சிக்காக
அயல்நாடுகளை சென்று வெற்றியுடன் பயணத்தை முடித்து,
தாயகம் திரும்பி உள்ள எங்கள்
மாண்புமிகு மின்துறை அமைச்சர் அவர்களே
வருக! வருக!!
●
எம். ஜெயராம்
முருகன் ரோட்வேஸ்,
கடலூர்—607 001

---

ஏழை எளியோர்கள் வாழ்த்திட
குடிசைக்கு ஒளிகண்ட உத்தமரே
வருக! வருக!
மின்துறையில் மறுமலர்ச்சி காண
வெளிநாடு சென்று வெற்றியுடன் திரும்பி வரும்
எங்கள் அன்பு அண்ணன் மாண்புமிகு
"பண்ருட்டியார்" அவர்களே
வருக! வருக!
❀



அன்பன்,
S. கலிதீர்த்தான் M.L.A.
சங்கராபுரம்



---

புரட்சித்தலைவரின் அன்புத் தம்பி,
பொதுப்பணியில் புனிதர்,
எல்லோருக்கும் இனியவர்,
எங்கள் அன்பு சகோதரர்,
மாண்புமிகு அமைச்சர்
பண்ருட்டியார் அவர்களே,
வருக! வருக





D. ஹிராசந்த் M.P.
தெ. ஆ. மாவட்ட கழகச் செயலாளர்
திண்டிவனம்
A. சின்னதுரை
M. L. A.
கழக வழக்கறிஞர்,
மேல்மலையனூர்
தொகுதி

---

வெளிநாடுபயணம் இனிது முடித்து தாயகம் திரும்பும்
எங்கள் ஆராதனைக்குரிய புனிதரே,
வருக! வருக!!
தமிழகத்தின் வளர்ச்சிக்கு
அல்லும் பகலும் அயராது
இதயதெய்வம் புரட்சித்தலைவருடன்
உடன் இருந்து பணிபுரிந்துவரும்
மாண்புமிகு "பண்ருட்டியார்" அவர்களே,
வருக! வருக!!
❀
A. தங்கராசு M.L.A.
சோரக்குப்பம்
குறிஞ்சிப்பாடி

---

வெளிநாடு பயணம் முடித்து தாயகம் திரும்பும்
புரட்சித்தலைவரின் அன்பு இளவலே வருக!
ஏழை எளியோர்களின் துயர்களைப் போக்கிடவே
வாழ்ந்து வரும்
"பொன்மனச் செம்மலின்" வழிவந்த புனிதரே,
வருக! வருக!
அன்பன்,
பெ. கலியமூர்த்தி
M.L.A.
மங்களூர்
தொகுதி



---





பொதுப்பணியில் புனிதர், புரட்சித்தலைவரின் இளவல்
அயல்நாடு சென்று திரும்பும் ஆற்றலின் திருவுரு,
எங்களின் அன்புக்குரிய
மாண்புமிகு
மின்துறை அமைச்சர்
அவர்களே
வருக! வருக!!
★
அன்பன்
K. S. வேணுகோபால்,
கழக ஒன்றிய செயலாளர்,
கீழக்குப்பம் : : பண்ருட்டி.

## யாழ்ப்பாணம் மேயர் உயிரோடு இருக்கிறார்

சென்னை, ஜூன் 9— இலங்கை யாழ்ப்பாணம் பகுதிகளில் உள்ள தமிழர்கள் பயங்கரமாக தாக்கப்பட்டு வருகிறார்கள். சிங்களவர்களும் இலங்கை போலீசாரும் தமிழர்களைத் தாக்கி அவர்களது சொத்துக்களைக் கொள்ளையடித்து வருகிறார்கள்.

இந்தக் கலவரத்தில் யாழ்ப்பாணத்து மேயர் கொல்லப்பட்டதாக சில தகவல்கள் கூறின.

இலங்கைத் தமிழரான யாழ்ப்பாணத்து மேயர் கொல்லப்படவில்லை. அவர் உயிரோடு இருக்கிறார் என்று சென்னையில் உள்ள இலங்கை தூதரக அதிகாரி ஜெயநாதன் ஒரு அறிக்கையில் தெரிவித்துள்ளார். தற்போது இலங்கையில் சட்டம் அமைதி நிலவுகிறது என்றும் கலவரப் பகுதிகள் சகஜ நிலைக்கு திரும்பியுள்ளதாகவும் அந்த அதிகாரி குறிப்பிட்டுள்ளார்.

பெயர்மாற்றப் போராட்டம்

## குமரி அனந்தன் விடுதலை

சென்னை, ஜூன் 9— மணியாச்சி ரயில் நிலையத்திற்கு வாஞ்சிமணியாச்சி என்று பெயரிட வேண்டும் என்ற போராட்டத்தில் கைதான கா. கா. தே. கா. தலைவர் குமரி அனந்தனை தமிழக அரசு விடுதலை செய்தது.

அந்தப் போராட்டத்தில் கைதான அனைவரையும் விடுதலை செய்து வழக்குகளும் வாபஸ் பெறப்பட்டுள்ளன.

மணியாச்சி ரயில்நிலையத்துக்கு வாஞ்சி மணியாச்சி என்று பெயரிடக் கோரி கடந்த மாதம் 18-ம் தேதி போராட்டம் நடத்தி கைதாயினர்.

அந்தப் போராட்டத்தில் கைது ஆகி இருக்கும் அனைவரையும் விடுதலை செய்து வழக்குகளையும் வாபஸ் பெறுமாறு அரசு உத்திரவு பிறப்பித்துள்ளது.

இதனை ஒட்டி குமரி அனந்தன் விடுதலை செய்யப்பட்டார். மதுரை சிறையில் இருந்து 50 பேர்களும், வேலூர் சிறையில் இருந்து 8 பேர்களும் விடுதலை ஆனார்கள்.

பிளஸ் டூ தேர்வுமுடிவுகள்

# முதலிடத்தை பெற்ற சென்னை மாணவர் நாராயணன்

## 1200க்கு 1123 மார்க் பெற்றார்

சென்னை, ஜூன். 9— கடந்த ஏப்ரல் மாதம் நடைபெற்ற பிளஸ் டூ (ஹையர் செகண்டரி பொதுத் தேர்வில் வெற்றி பெற்ற மாணவர்களில் சென்னை எழும்பூர் டான் பாஸ்கோ பள்ளியை சேர்ந்த மாணவர் கே. நாராயணன் தமிழகத்திலேயே முதல் இடத்தை பெற்றுள்ளார். 1200 மார்க்குகளுக்கு இவர் பெற்ற மதிப்பெண்கள் 1123.

இந்த ஆண்டு ஏப்ரல் மாதம் நடைபெற்ற பிளஸ்டூ இறுதித் தேர்வில் தமிழகம் பூராவில் இருந்தும் 1 லட்சத்து 45 ஆயிரத்து 974 மாணவமாணவிகள் தேர்வு எழுதினார்கள். பள்ளிகளில் படித்து தேர்வு எழுதினவர்கள் தவிர பிரைவேட்டாக எழுதினவர்களின் எண்ணிக்கையும் இதில் அடங்கும். பள்ளிகளின் மூலம் தேர்வு எழுதிய மாணவர்களின் எண்ணிக்கை 1 லட்சத்து 23 ஆயிரத்து 757. மொத்தத்தில் 61 சதவிகிதத்தினர் இந்தத் தேர்வில் வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

தேர்வு எழுதிய மாணவர்களில் பொது மற்றும் தொழிற்கல்வியில் 59 சதவிகிதத்தினரும், மாணவிகளில் 67 சதவிகிதத்தினரும் வெற்றி பெற்றுள்ளனர். பொதுக்கல்வியில் மாணவர்களின் எண்ணிக்கை 61 சதவிகிதம் மாணவிகளின் எண்ணிகை 64 சதவிகிதம்.

### முதலிடம்

தமிழகத்திலேயே முதல் இடத்தைப் பெற்றுள்ள மாணவர் கே. நாராயணன், இவர் சென்னை எழும்பூர் டான் பாஸ்கோ ஹையர் செகண்டரி பள்ளியைச் சேர்ந்தவர். மொத்த மதிப்பெண்கள் 1200க்கு இவர் எடுத்த மதிப்பெண்கள் 1123. சதவிகிதம் 93.6 இரண்டாவது இடத்தை பெற்றுள்ள 2 பேர்களும் மாணவிகள். ஒருவர் பெயர் கே. மீரா பாய். இவர் சென்னை மயிலாப்பூர் புனித அந்தோணி பெண்கள் ஹையர் செகண்டரி பள்ளியைச் சேர்ந்தவர் மற்றொருவரின் பெயர் ஜெயஸ்ரீ நாகராஜன். இவர் சென்னை மயிலாப்பூர் ரோசரி மெட்ரிகுலேஷன் பெண்கள் மேல்நிலைப்பள்ளியைச் சேர்ந்தவர்.

இவர்கள் ஒவ்வொருவரும் எடுத்த மதிப்பெண்கள் 1114. 3-வது இடத்தைப் பெற்றவர் பி. சுதா. இவரும் ரோசரி மெட்ரிக்குலேஷன் பள்ளியைச் சேர்ந்தவர். இவர் எடுத்த மதிப்பெண்கள் 1109. 4வது இடத்தைப் பெற்றுள்ளவர் எஸ். நிர்மலா. இவர் எடுத்துள்ள மதிப்பெண்கள் 1106. நிர்மலா கோயம்புத்தூர் மாவட்டம் பாப்பநாய்க்கன் பாளையத்தில் உள்ள மணி மேல்நிலை பள்ளியைச் சேர்ந்த மாணவி.

தேர்வு எழுதிய மாணவ மாணவியர்களின் மதிப்பெண்கள் அடங்கிய சான்றிதழ்கள் சம்பந்தப்பட்ட மாவட்ட கல்வி அதிகாரிகளுக்கு வரும் 15ம் தேதி அனுப்பி வைக்கப்படும்.

ஒவ்வொரு மேல்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் இந்த சான்றிதழ்களை மாவட்ட கல்வி அதிகாரியிடம் இருந்து பெற்று மாணவர்களுக்கு அனுப்பி வைக்க கோரப்படுகிறார்கள்.

தனியாக தேர்வு எழுதிய மாணவர்களுக்கு விண்ணப்பங்களில் கொடுத்துள்ள முகவரிப்படி ஜூன் 15க்குப் பின் சான்றிதழ்கள் தபாலில் அனுப்பி வைக்கப்படும்.

சேலம் அழைக்கிறது

# புலிநிகர்த் தோழனே புறப்படு! புறப்படு!

காலம் ஈன்ற கருணைத்தேவன்-நம்
தானைத்தலைவன் பெயரால் அமைந்த
மன்றங்களின் மாநாடு
சேலம் எனும் செந்தமிழ் மண்ணில்
சுயமரியாதைத் தங்கங்கள்
சுடர்விரித்த பூமியில்

— பட்டாளத்துச் சிப்பாய்களே
பாசறை நோக்கிப்
புறப்படுங்கள்!
புறப்படுங்கள்!

பொற்காலம் படைத்தது
மூவேந்தர் ஆட்சியெனில்
பிற்காலத்தில் தோன்றிய
பொன்னான ஆட்சி
புரட்சி மயமான ஆட்சி
அண்ணாவின் ஆட்சியென்று
நல்லறிஞர் எல்லாம்
நாவார மனமாரப் போற்றுகின்றார்.

— அத்தகு
ஆட்சித் தலைவனின் புகழ்பாட
ஆட்சியின் மாட்சிக்கு வாழ்த்துரைக்க
சேலம் 13,14 தேதிகள்
சீரார்ந்த மாநாடு!

புரட்சிப் பொறிகளே
புறப்பட்டு வாருங்கள்!
எழுச்சியின் வடிவங்களே
ஏறுநடை போடுங்கள்!

மங்காத தமிழெடுத்து
சங்கநாதம் செய்யுங்கள்
பொங்கருவிப் புனலாகிச்
சங்கீதம் பாடுங்கள்!

மன்றத்தின் மணிவிளக்குகளாம்
மறக்குலத்தின் முன்னோடிகளாம்
முசிறியும் சௌந்திரராசனும்
முன்னின்று அழைக்கின்றார்-

நித்தமொரு வரலாறென
எத்தனையோ வரலாறுகளைப் படைத்தநாம்
முத்தனைய புதுச்சரிதம்
இத்தினத்தில் படைத்திடுவோம்!

படைக்கஞ்சா சேனையிது— எந்தத்
தடைக்கஞ்சா சேனையிது
மடையுடைத்துப் பாய்ந்துவரும்
மாவீரர் சேனையிது என

அகிலத்திற் குணர்த்துவோம்
நாம் நடத்தும்
அணிவகுப்பு
அண்டத்தை அதிரடிக்கட்டும்
நாம் நடத்தும்
மாநாடு
மனஎழுச்சி விளைக்கட்டும்—மண்ணில்
மறுமலர்ச்சி தழைக்கட்டும்!

அண்ணாவின் இதயக்கனி
நம் தலைவர்
அந்த இதயக்கனியின்

இதயத்தில்
இனிய நினைவுகளை
அலை அலையாய் எழுப்பிட
அரிமா வீரர்களே அலை அலையாய் வாருங்கள்
ஆற்றல் மறவர்களே அணிஅணியாய் வாருங்கள்!

'இப்படை தோற்கின்
எப்படை ஜெயிக்கும்?'
என்றன்றே அண்ணன் கேட்டார்!
'இப்படை தோற்கின்
எப்படை நிலைக்கும்?'. எனநம்
புரட்சித் தலைவர் கேட்டுப் பூரிக்க

புறநானூற்றின்
புதிய வார்ப்புகளே!
புலி வீரத்தின்
புதிய வடிவங்களே!
சத்தியச் செல்வனின்
திருமுகம் காண...
இத்தமிழ் பூமியின்
எழுச்சியைக் காட்ட...
தத்துவ உரைகளை
நெஞ்சினில் ஏற்க...

தாய்க்குல தீபங்களே
சேய்களுடன் வாருங்கள்!
தடந்தோள் வீரர்களே
துணைவியுடன் வாருங்கள்!

'இனி வரும் காலம்
எம்காலம்-எம்
இருகரம் படைக்கும்
பொற்காலம்'-என

செந்தமிழ் மக்களே-சேலம் நோக்கி
சிந்துபாடிப் புறப்படுங்கள்!

தலைவன் அழைக்கின்றார்
தமிழினமே வா! வா! வா!

சென்னை வானொலி செய்யும் அநீதி:

# பெரியார், அண்ணா பெயர் வரும் பாடலை ஒலிபரப்ப மறுப்பு

## புலமைப்பித்தன் கண்டனம்

சென்னை, ஜூன் 9— கட்டணம் செலுத்தினால் கூட தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பெயர் இருப்பதால் சென்னை வானொலி நிலையம் ஒலிபரப்ப மறுக்கும் அநீதியை மேலவை துணைத்தலைவர் புலமைப்பித்தன் வெளிப் படுத்தியுள்ளார்.

சென்னை வானொலியின் இந்த அநீதிப் போக்கை எதிர்த்துப் போராட்டம் நடத்த வேண்டி வரும் என்று புலமைப்பித்தன் தெரிவித்துள்ளார்.

புலமைப்பித்தன் நிருபர்களிடம் கூறியதாவது:-

எனது சொந்த நிறுவனமான காஞ்சி கம்பைன்ஸ் சொர்க்கத்தின் திறப்பு விழா என்ற பெயரில் ஒரு சமூகப்படம் தயாரித்துள்ளது. இந்தப் படம் இம்மாதம் வெளியிடப்படுகிறது.

இந்தப்படத்திற்கு வானொலியில் விளம்பரம் கொடுக்க சென்றேன். வர்த்தக ஒலிபரப்பில் விளம்பரம் செய்ய 5 பாடல்களைக் கொடுத்து அதற்கான பணத்தையும் கட்டினேன்.

### பெரியார் பெயர் கூடாதாம்

ஆனால் இதில் இரண்டு பாடங்களை மட்டுமே ஒலிபரப்பமுடியும் என்றார்கள். ஒரு பாட்டில் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா பற்றி வருகிறது. அந்தப் பாட்டு புறக்கணிக்கப்பட்டுள்ளது.

பெரியார் அண்ணா பெயரைச் சொல்ல மறுத்ததால் நான் விளம்பரத்தை திரும்பப் பெற்றுக் கொண்டேன்.

தணிக்கைசெய்யப்பட்டு சான்றிதழ் பெற்ற படத்தின் பாடல்களைகட்டணம் செலுத்தியும் விளம்பரம் செய்ய மறுப்பது கண்டிக்கத்தக்கது.

### இருட்டடிப்பு

இந்தச் செயல் வேண்டுமென்றே பெரியார், அண்ணா பெயர்களை இருட்டடிப்புச் செய்வதாகும்.

இப்படி தமிழகத்தலைவர்களின் பெயரை ஒலிபரப்ப மறுக்கும் வானொலியின் போக்கிற்கு காரணம் தெரியவில்லை.

இதற்கு முன்பும் இப்படி பல பாடல்கள்மறுக்கப்பட்டுள்ளன.

வானொலி நிலையத்தின் இந்தப்போக்கு நீடித்தால் போராட்டம் நடத்த வேண்டிவரும்.

இது குறித்து மத்திய அரசின் ஒலிபரப்பு அமைச்சர் சரியான நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இவ்வாறு புலமைப் பித்தன் கூறினார்.

## பஸ்களில் மாணவர்களுக்கு பயண சலுகை: பல்லவன் அறிவிப்பு

சென்னை, ஜூன் 9-பல்லவன் போக்குவரத்தில் பள்ளிமாணவர்கள் சலுகை பயணச்சீட்டு பெறுவது குறித்து பல்லவன் போக்குவரத்துக்கழகம் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளது. அதில்கூறப்பட்டிருப்பதாவது.

சலுகை பயணச்சீட்டு பெறும் மாணவர்கள் தங்கள்பெயர்களைபதிவுசெய்து விண்ணப்பம் பெற வேண்டும் 11ந் தேதி முதல் விண்ணப்பம் வழங்கப்படும்.

எந்த பள்ளியில் எந்த வகுப்பில் மாணவர் படிக்கிறார் என்ற பள்ளி சான்றிதழ் கொடுத்தால் தான் சலுகை விண்ணப்பம் வழங்கப்படும். இது முழுநேர மாணவர்களுக்கு மட்டும் தான். மற்றவர்களுக்குபின்னர் அறிவிக்கப்படும்.

பள்ளியில் வழங்க வேண்டிய சான்றிதழின் மாதிரி எல்லா பள்ளிகளுக்கும் அனுப்பப்பட்டுள்ளது. சான்றிதழில் தவறு ஏற்பட்டால் விண்ணப்பம் வழங்கப்படமாட்டாது. உதவித்தொகை பெறும் மாணவராக இருந்தால் சான்றிதழில் அது பற்றி குறிப்பிடப்படவேண்டும்.

இவ்வாறு அதில் கூறப்பட்டுள்ளது.

## அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சி

ஜூன் 9 மதுரை புறப்படல், 10, மதுரை, கார் மூலம் சிவகாசி.

காலை சவுந்தரராசன் திருமணம்

முதல்வர் புரட்சித் தலைவர் பங்கேற்கும் நிகழ்ச்சிகள், ஜூன் 11 காலை10.30 முதல்வர் கூட்டியுள்ள வறட்சிப்பாதிப்புமாவட்ட கலெக்டர்கள் மாநாட்டில் கலந்து கொள்ளுதல்.

## தத்துவமேதை டி.கே.சீனிவாசன் நிகழ்ச்சிகள்

ஜூன் 10-ந்தேதி காலை திருச்சியில் திருமண விழாவில் பங்கேற்பு, மாலை திருச்சி மாவட்ட மருத்துவமனை பார்வையிடுதல், 11-ந்தேதி கும்பகோணம் சோழன் போக்குவரத்துக் கழகத்தினைப் பார்வையிடுதல், 12-ந் தேதி மாயவரத்தில் நடக்கும் திருமணத்தில் கலந்து கொள்ளுதல், 14-ந் தேதி சேலத்தில் நடக்கும் அகில இந்திய எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டில் கலந்து கொள்ளுதல்.

## அனகாபுத்தூர் கழகக் கூட்டம்

11-6-81 வியாழன் மாலை 6 மணிக்கு அம்மன்கோவில் திடலில் தருமன் தலைமையில் பேசுவோர்: முனு ஆதி, அடியார், அனகாபுத்தூர் ராமலிங்கம், எம். எல். சி. அப்துல்ரசாக், எம். எல். ஏ., சி. வி. ஆடலழகன், வண்ணை கோவிந்தன், த. சக்கரபாணி, சங்கர், பிரகலாதன், நடராசன், மணி, நாராயணன், அமிர்தலிங்கம், ராசகோபால், தங்கவேலு, அழகேசன் மற்றும் பலர்.

## மறைவு

சென்னை 112 வது வட்டம் மதியழகன் நகர் எம்.ஜி.ஆர். மறுமலர்ச்சி மன்றத்தின் செயற்குழு உறுப்பினரும், நாகாத்தம்மன் ஆலய நிர்வாகக்குழுத் தலைவருமான ஆர். மாரிமுத்து கடந்த 4-ந் தேதி கோடம்பாக்கம் அருகில் ரயில் பாதையைக் கடக்கும்போது விபத்து ஏற்பட்டு மரணமடைந்தார். அவரது இறுதி ஊர்வலத்தில் சார்பு மன்றத் தோழர்களும் சர்வகட்சி நண்பர்களும் கலந்துகொண்டு இறுதி அஞ்சலி செலுத்தினர்.

# ப. உ. ச. கடிதம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கலத்தில் பயணம் செய்து சுகங்காணத் துடிக்கின்றவர்கள் அல்ல! கலம் தட்டுத்தடையின்றி செலுத்திட உதவிடும் துடுப்புகள்!

தாய்க்கழகத்தை அச்சுறுத்தக் கூடவில்லை! அச்சுறுத்துவோருக்கு எச்சரிக்கைவிட கூடுகின்றனர்!

புரட்சித் தலைவரின் செல்வாக்கு எப்பேர்ப்பட்டதென்று சேலம் தெருக்களில் காட்டவேண்டிய அவசியம் 'எம். ஜி. ஆர். மன்றங்களுக்கில்லையென்றாலும் நடைபெறவிருக்கும் அணிவகுப்பு நாட்டைக் காக்கும் நம் வீட்டுப்பிள்ளைகள் திறமைக்கு எடுத்துக்காட்டாக விருக்கும் என்று மன்றங்களின் செயலாளரும் தலைவரும் கூறுகின்றனர்!

சேலத்தில் வாநாடு நடைபெற உள்ளநேரம் சிங்களத்தீவில் தமிழர்கள் வீதியெல்லாம் பற்றி எரியும் "தீயவர்கள் தீச்செயல்" உச்சகட்டம் அடைந்திருக்கும் நேரம் என்பதையும் அறிந்துதான் கூடுகிறார்கள்!

இலங்கையிலே தமிழர்களுக்கேற்பட்டுள்ள இன்னலைத் துடைப்பதாகக் கூறிக்கொண்டு தங்கள் நொடை அரிப்பைத் தீர்த்துக்கொள்ள இங்கே சொரிகின்றார்கள் சிலர்!

ஆனால் நாம் தொடை தட்டவில்லை! அதே நேரத்தில் அங்கே தமிழர்களின் நிலைகேட்டு கேளாக்காதினராகவும் இருந்திடத்தயாராக இல்லை!

இன்று இலங்கையில் பற்றி எரியும் தீக்குக் காரணமாயிருந்த திருமதி பண்டாரநாயகாவிற்குமாலை அணிவித்து மகிழ்ந்தவர்கள் நாமல்ல என்பதை சிலர் மறந்திருக்கலாம் ஆனால் வரலாற்றில் அந்தச் சேதி இன்னும் அழியவில்லை!

தமிழர்கள் அனாதைகளல்ல என்பதை உலகுக்கு நிரூபிக்க வேண்டிய நேரம் வரும்போது நம் கழகம் சளைக்காமல் முன்நிற்கும்.

தவிர்க்க முடியாத சாவிற்காக அன்றாடம்செத்து செத்துப் பிழைப்பதைவிட "இருப்பது ஒரு உயிர் தான்! அது நம்மை விட்டுப் பறப்பது ஒரு முறை தான்" என்ற நம் அண்ணனின் பொன்மொழியை மனதில் பதிய வைத்த வைரங்கள் சேலத்தில் கூடுகின்றனர்.

வாருங்கள்! காண்போம்!

அன்புள்ள

ப. உ. ச.

## அமைச்சர் ஆர். எம். வீ. நிகழ்ச்சிகள்

ஜூன் 10-ந்தேதி திண்டுக்கல்லில் போடி சட்டமன்ற உறுப்பினர்கள் ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சியில் கலந்துகொள்ளல். 11-ந் தேதி காலை பெரியகுளம் சட்டமன்ற உறுப்பினர்கள் ஏற்பாடு செய்துள்ள நிகழ்ச்சியில் பங்கேற்பு, மாலை பட்டுக்கோட்டையில் நடைபெறும் தொகுதி நிகழ்ச்சிகள், பிறகு பொதுக்கூட்டத்தில்கலந்து கொள்ளுதல்,

12-ந் தேதி காலை பட்டுக்கோட்டை திருமண நிகழ்ச்சியில் கலந்து கொள்ளுதல், பிறகு தஞ்சையில் நடைபெறும் திருமண நிகழ்ச்சியில் பங்கேற்றல், மாலை காரைக்குடியில் எம். எல். லட்சுமணன் நினைவு நகராட்சி மகப்பேறு குழந்தை நல இல்லத் திறப்பு விழாவில் கலந்து கொள்ளுதல்.

13 ந் தேதி, கொப்பனம்பட்டி முத்து விநாயகர் விஸ்வேசுவரர் ஆலய திருப்பணி அடிக்கல்நாட்டு விழா, பின்னர் அன்ன வாசல் ஒன்றிய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு 14ந் தேதி சேலம் எம் ஜி. ஆர். மன்ற மாநாட்டில் கலந்து கொள்ளுதல்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor:
B. PARASURAMAN

## ஆலந்தூர் தோழர்கள் சேலம் புறப்பாடு

சென்னை, ஜூன் 9— சேலத்தில் நடைபெறும் எம்.ஜி ஆர். மன்றமாநாட்டில் கலந்து கொள்ள ஆலந்தூர் ஐந்தாவது வட்டத்திலிருந்து கழகத் தோழர்கள் பெரும் பான்மையோர் சேலம் புறப்பட்டுசெல்கின்றனர்.

## கொண்டிதோப்பு

10 6.81 புதன்மாலை 7. மணிக்கு சிவஞானம் பூங்கா அருகில் மணியப்பன் தலைமையில் பேசுவோர் வலம்புரிஜான், மதுசூதன், புலவர் வேதா, ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, மண்ணடிக் கிருஷ்ணமூர்த்தி எம்.பி. ஆனந்தன், ஜியாவுதீன், கு. கஜேந்திரபாபு, தரங்கை கண்ணன், விஜயன், குமார், தட்சிணாமூர்த்தி, சாமிநாதன் குமார். கருணாநிதி, எம். வி. ராமன், சி. கோ. சுந்தரம், மற்றும் பலர்.

தலைமைக்கழக அறிக்கை எண்: 115-81

## அச்சரப்பாக்கம் கழகத் தோழர்களுக்கு

இம்மாதம் 15-ந் தேதி அச்சரப்பாக்கத்தில் நடப்பதாக அறிவிக்கப்பட்டிருந்த — பொதுச் செயலாளர் ப. உ. ச. அவர்கள் கலந்து கொள்ள இருந்த பொதுக்கூட்டம் தள்ளிவைக்கப்படுகிறது. மாற்றுத் தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

—தலைமைக்கழகம்

தலைமைக்கழக அறிக்கை எண்: 114—81

## மதுரை மாவட்ட கழகத் தோழர்களுக்கு

கழகத்திலிருந்து நீக்கிவைக்கப்பட்டிருந்த மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த

வே. ராஜன் செல்லப்பா
(மாவட்ட மாணவர் அணி அமைப்பாளர்)

தனது செயலுக்கு வருந்தி தன்னை மீண்டும் கழகத்தில் இணைத்துக்கொள்ள வேண்டும் என்று நேரிலும், கடிதம் மூலமாகவும் விடுத்த வேண்டுகோளை ஏற்று அவர் கழகத்தில் இணைந்து முன்பு பணியாற்றிய பொறுப்பில் தொடர்ந்து பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

சென்னை-14
9-6-81

# மீண்டும் கழகம் ஆட்சிக்கு வந்து

# ஓராண்டில் படைத்த உன்னத வரலாறு

புரட்சித்தலைவரின் தலைமையில் கழகம் மீண்டும் ஆட்சிப் பொறுப்பேற்று இன்றுடன் ஓராண்டு ஆகிறது. இந்த ஓராண்டுக் காலத்தில் அண்ணாவின் ஆட்சி ஆற்றிய பணிகளில் சிலவற்றை இங்கே நினைவு கூர்கிறோம்.

## கல்வித்துறை கண்ட வளர்ச்சி

கல்வித் துறையில் கழக ஆட்சியில் கடந்தஓராண்டு நிறைவேற்றியுள்ளசாதனைகள் வருமாறு—

கடந்த 80-81ம்ஆண்டில் பள்ளிக் கூடங்களில் ஒரு லட்சத்து 93 ஆயிரம் மாணவ மாணவிகள் கூடுதலாக சேர்க்கப்பட்டனர். முதல் வகுப்பு மாணவர்களுக்கு சிலேட்டுகள் இலவசமாக வழங்க 6 லட்சம் ரூபாய் செலவிடப்பட்டது.

3 ஆயிரத்து 247 உயர்நிலைப் பள்ளிகளில் 1243 மேல் நிலைப் பள்ளிகள் இருந்தன. இப்பள்ளிகளில் 22 லட்சத்து 17 ஆயிரம் பேர் படித்தனர்.

புதிதாக 74 அரசு பள்ளிகளும், 2 நகராட்சி பள்ளிகளும், 34 தனியார் பள்ளிகளுமாக மொத்தம் 110 உயர்நிலைப்பள்ளிகள் திறக்கப்பட்டன.

1018 உயர்நிலைப்பள்ளிகளில் அறிவியல் ஆய்வுக் கூடங்கள் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு பள்ளிக்கும் 18 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள கருவிகள் தரப்பட்டுள்ளன.

கிராமப்புற பள்ளிகளுக்கு 32தொலைக்காட்சி பெட்டிகள் கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழ்நாட்டு பாடநூல் நிறுவனத்தின் மூலம் 2 கோடியே 31 லட்ச ரூபாய்க்கு மலிவு விலை நோட்டுப்புத்தகங்கள் தயாரித்து விற்கப்பட்டன.

சிறுபான்மையினர் அல்லாத பிற தனியார் பள்ளிகளில் பணியாளர்களை நியமனம் செய்யும்போது வேலை வாய்ப்பு நிறுவனத்தின் மூலம் தான் நியமிக்கவேண்டும் என்றும் அப்பள்ளி ஆசிரியர்களில் 18 சதவிகிதம் ஆதி திராவிட, மலைசாதியினருக்கு ஒதுக்கவேண்டும் — 50 சதவிகிதம்பிற்படுத்தப்பட்டோருக்கு ஒதுக்க வேண்டும் என உத்தரவிடப்பட்டுள்ளது.

அரசு பள்ளி ஆசிரியர்கள் பெற்றுவந்த விழா முன்பணம், கைத்தறிதுணி வாங்க முன் பணம், சைக்கிள் வாங்க முன் பணம் ஆகியவை தனியார் பள்ளி ஆசிரியர்களும் பெற உத்தரவிடப்பட்டது.

வறுமையால் வாடும் ஆசிரியர்களுக்கு 44 ஆயிரம் ரூபாய் வழங்கப்பட்டது.

மேல்நிலைப்பள்ளிகளில் 2100 கூடுதல் ஆசிரியர்கள் நியமிக்கப்பட்டனர். 944 மேல்நிலை பள்ளிகளில்1510 தொழிற்பாடங்கள்கற்றுத் தரப்பட்டன. 4324 பகுதி நேர தொழிற்பாட ஆசிரியர்களை நியமிக்க அனுமதிக்கப்பட்டது.

மேல் நிலைப் பள்ளி நூலகங்களுக்காக 43 லட்ச ரூபாய் அளிக்கப்பட்டது. அரசு கல்லூரியில் அறிவியல்கல்வி வளர்ச்சிக்காக புத்தக நூலகம் அமைக்கப்பட்டுள்ளது.

ஊராட்சி ஒன்றியபள்ளிகளில் பணிபுரிந்த 97 ஆயிரம் ஆசிரியர்களையும் அரசு ஊழியர்களாக அரசு ஏற்றுக் கொண்டுள்ளது.

2500 ஹையர்கிரேடு ஆசிரியர்கள் தமிழக அரசின் சலுகையைப் பயன்படுத்தி தபால் மூலம் பயின்று தேர்வு எழுதியதில் 2400 பேர் வெற்றி பெற்று செகண்டரிகிரேடு உயர்வு பெற்றுள்ளனர்.

3 ஆயிரம் ஆசிரியர்களுக்கு விடுமுறை கால பயிற்சி அளிக்கப்பட்டது.

## ஓராண்டில் தொழில்புரட்சி

முதல்வர் புரட்சித்தலைவரின் தலைமையில் நடைபெற்று வரும் கழக ஆட்சியில் கடந்த ஓராண்டில் தொழில் துறை குறிப்பிடத்தக்க வளர்ச்சியைப் பெற்றுள்ளது.

தமிழகத்தின் கிராமப் புறங்களில் உள்ள ஏழை எளிய மக்கள் வேலைவாய்ப்பினைப் பெறவும் அதன் மூலம், அவர்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவும், குறிக்கோளாகக் கொண்டு, தமிழக அரசு தொழில் துறைக்கு முக்கியத்துவம் அளித்து வருகிறது.

தமிழ்நாட்டில் இயற்கையாக கிடைக்கும் மூலப் பொருட்கள் அதிக அளவு இல்லாத நிலை உள்ளது. அதுபோல எரிபொருளும் தமிழகத்தில் பற்றாக் குறையாகவே உள்ளது.

இத்தகைய நிலையிலும் தமிழகத்தில் சிறுதொழில் வளர்ச்சி குறிப்பிடத்தக்க வகையில் உள்ளது.

### பெரும் வளர்ச்சி

தமிழகத்தில் ஏற்பட்டுள்ள தொழில் வளர்ச்சி ஓர் குறிப்பிட்ட துறையில் மட்டுமின்றி எல்லாவகை தொழில்களும் ஒரே சீராக வளர்ச்சி பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது ஆகும்.

1977 மார்ச் கடைசியில் தமிழகத்தில் 18 ஆயிரத்து 789 சிறுதொழில் நிறுவனங்கள் பதிவு செய்யப்பட்டிருந்தன.

1980 அக்டோபரில் பதிவு பெற்ற சிறுதொழில்களின் எண்ணிக்கை 32 ஆயிரத்து 681 ஆக உயர்ந்தது.

இதன் மூலம் 40 ஆயிரம் பேருக்கு புதிதாக வேலை வாய்ப்பு கிடைத்தது.

சிறு தொழில்கள் மட்டுமின்றி நடுத்தரரக மற்றும் பெரிய தொழிற்சாலைகளும் திட்டமிட்டு அமைக்கப்பட்டு வருகின்றன.

புரட்சித் தலைவரின் ஆட்சியில், தமிழகத் தொழில் துறை கடந்த ஆண்டுகளில் பெற்ற வளர்ச்சியைப் போலவே வரும் ஆண்டுகளிலும் பெரும்வளர்ச்சியைப்பெறும் என்பதில்சந்தேகமில்லை.

மாவட்டங்களில் பெரும் தொழிற்பேட்டைகள், திருச்சி மாவட்டம் புகளூரில் பெரும்காகிததொழிற்சாலை புதிய சர்க்கரை ஆலைகள், இப்படிப் புதிய புதிய ஆலைகள் அமைக்க திட்டங்கள் தயாராகின்றன.

இப்படி—தமிழகத்தின் தொழில்துறை கழக ஆட்சியில் தொடர்ந்து முழு அளவில் வளர்ந்து வருகிறது.

—அமைச்சர் திருநாவுக்கரசு

## குழந்தை நலம்காக்க தீவிர திட்டங்கள்

மக்கள் நல்வாழ்வு, மருத்துவம், குடும்பநலத் துறைகள் கடந்த ஓராண்டில் செய்துள்ள சாதனைகள் வருமாறு:-

மருத்துவத் துறையில் மக்களின் நல்வாழ்வு முன்னேற்றப்பணிகள், நோய்த் தடுப்பு, நோய் நீக்குப் பணிகள், புனரமைப்பு ஆகியவற்றை பலப்படுத்தும் வகையில் உறுதியான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மருத்துவக் கல்லூரி மருத்துவமனைகளில் உள்ள படுக்கைகளின் எண்ணிக்கை 14 ஆயிரத்து 689 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

மருத்துவக் கல்வியில் அதிகமா...வர்களைச்சேர்க்கும் வகையில் எம். பி. பி. எஸ். 25 இடம், பல் சிகிச்சை பட்டப்படிப்புக்கு ஒரு இடம், மேற்பட்டப் படிப்புக்கு 6 இடம், பட்டப்படிப்புக்கு 68 இடம், மேல்சிறப்பு படிப்புக்கு 16இடம், செவிலியர் பயிற்சிக்கு 440 இடம், பலநோக்கு உடல் நலப்பார்வையாளர் பயிற்சிக்கு 960 இடம் என்ற வகையில்கூடுதலாக்கப்பட்டுள்ளது.

### நவீன இயந்திரம்

சென்னை பொது மருத்துவமனைக்கு 40 லட்சம் ரூபாய் செலவில் நரம்பு இயல் பயிற்சிக்கு "முப்பரிமாண உருப்பதிவு" எந்திரமும் 7 லட்சத்து 17 ஆயிரம் ரூபாய் செலவில் "பலவழி இதயதுடிப்பு பதிவு" கருவியும் வாங்கப்பட்டுள்ளது.

தமிழகம்முழுவதுமுள்ள மருத்துவக்கல்வி மருத்துவமனைகளை விரிவாக்க 84 லட்சத்து 97 ஆயிரம் ரூபாய் செலவில் புதிய கட்டிடங்கள்கட்ட உத்தரவிடப்பட்டு நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

தமிழ் நாட்டிலுள்ள மாவட்ட, வட்ட தலைமை மருத்துவமனைகளில் 2 ரதத சேமிப்பு நிலையமும், 5 பல் சிகிச்சை பிரிவும், 6 எலும்பு முறிவு சிகிச்சை பிரிவும், 5 காது மூக்கு தொண்டைசிகிச்சை பிரிவும், 4 பால்வினை நோய் பிரிவும், 6 குழந்தைகள் சிகிச்சை பிரிவும் தொடங்கப்பட்டுள்ளன

இந்த தலைமை மருத்துவமனைகளுக்காக 47 லட்ச ரூபாயில கருவிகளவாங்கப்பட்டுள்ளன.

கடந்த ஆண்டில்மட்டும் 12 ஆயிரத்து 776 பேர்களுக்கு கண் அறுவை சிகிச்சை செய்யப்பட்டது.

பீடி சுற்றும் தொழிலாளர்கள், மற்றும் கைத்தறி தொழிலாளர்களைக் காச நோய் தாக்கியுள்ளதா என்று கண்டறியும் வகையில் ஒரு திட்டம் தீட்டப்பட்டுள்ளது.

இதற்காக 36 லட்சத்து 45 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டு 5 பகுதிகளில் நடமாடும் எக்ஸ்ரே பிரிவு தொடங்கப்பட்டுள்ளது. சேலம், ஈரோடு, திண்டுக்கல், தூத்துக்குடி, வேலூர் ஆகிய இடங்களில் இவை அமைக்கப்படுகின்றன.

ஆறு மாவட்ட தலைமை இடங்களில் ஓமியோபதி மருந்தகங்கள் துவங்க ஒப்புதல்தரப்பட்டுள்ளன.

குடும்ப கட்டுப்பாடு திட்டத்தை அரசு சிறப்பாக செயல்படுத்தி வருகிறது. ஒரு லட்சத்து 34 ஆயிரத்து 224 பேருக்கு அறுவை சிகிச்சையும் 31 ஆயிரத்து 463 பேருக்கு கருத்தடை வளையங்களும் பொருத்தப்பட்டன.

கடந்த ஓராண்டில் 70 ஆயிரத்து 146 பேர் கருத்தடை சாதனங்களைப்பயன் படுத்தினர். 3 ஆயிரத்து 23 பேர் மாத்திரைகளை சாப்பிட்டனர்.

சேலம், தென் ஆற்காடு மாவட்டங்களில் டென்மார்க் நாட்டிலுள்ள அனைத்து நாட்டு வளர்ச்சி நிறுவன உதவியுடன் குழந்தைகள் நலனைக் காக்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

கிராமப்புற மருத்துவமனைகளுக்கு வழங்கப்பட்ட மருந்துகளின்அளவு 20 ஆயிரம் ரூபாயாக உயர்த்தப்பட்டது.

பள்ளி சிறுவர்களின் நல்வாழ்வையொட்டி 6 வயது முதல் 11 வயது வரையுள்ள பள்ளி மாணவர்கள் பரிசோதிக்கப்பட்டுஇலவச மருந்துகள் வழங்கப்படுகின்றன. 80ம் ஆண்டில் விரிவுபடுத்தப்பட்ட 20 தொடக்க நல்வாழ்வு நிலையங்களும்சேர்ந்து 103நிலையங்களில் செயலாக்கி வருகிறது. இதன்படி கடந்த ஆண்டு டிசம்பர் வரை ஒரு லட்சத்து 25 ஆயிரத்து 972 மாணவர்களுக்கு பரிசோதனை செய்யப்பட்டது.

கடந்த ஆண்டில் 2 லட்சத்து 32 ஆயிரத்து 609 குழநதைகளுக்கு தடுப்பு ஊசி போடப்பட்டது.

ஸ்ரீரங்கம், கொல்லிமலை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், குமரி மாவட்டம் வீரப்புலி ஒதுக்காடு ஆகியஇடங்களில்மூலிகைப் பண்ணை அமைக்கப்பட இருக்கிறது.

## ஊனமுற்றோருக்கு மறுவாழ்வு

கழக அரசு இரண்டாம் முறையாக அமைந்து ஓராண்டு நிறைவாகிறது.

கடந்த ஆண்டில் சமூக நலத்துறை, கால்நடை பராமரிப்புத்துறை செய்த சாதனைகள் வருமாறு:

சமூகநலத்துறை மூலம் கடந்த ஆண்டில் 267 தீப்பெட்டித் தொழிற் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பட்டன. இவற்றின் மூலம் 5 ஆயிரத்து 340 பெண்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது.

பனைப்பொருள் உற்பத்தி தொழில் நிலையங்கள் 10 அமைக்கப்பட்டு அதனால் 250 கிராமப் பெண்கள் வேலை வாய்ப்பு பெற்றுள்ளனர்.

மருத்துவ மனைகளில் நெடுங்காலமாக சிகிச்சை பெற்றுவரும் சிறுவர்களுக்காக கல்வி வசதிகள் அளிக்கப்பட்டு வருகின்றன. கடந்த ஆண்டில் மட்டும் 4 ஆயி

(5-ம் பக்கம் பார்க்க)

## தினசரி 66 லட்சம் பயணிகட்கு பலன்

கடந்த ஓராண்டு காலத்தில் போக்குவரத்துத் துறையில் கழக அரசு செய்துள்ள சாதனைகள் வருமாறு:-

பெரும்பாலான மக்கள் சாலைகளின்வழியேபயணம் செய்ய விரும்புகின்றனர். கழகஅரசு சாலை போக்குவரத்துகளை படிப்படியாக நாட்டுடைமையாக்குப் கொள்கையை செயலாக்கி வருகிறது.

அரசு போக்குவரத்துக் கழகங்கள் சுமார் 7 ஆயிரம் பஸ்களை தினமும் 20 லட்சம் கிலோ மீட்டர் தூரம் விட்டுக் கொண்டிருக்கிறது. தினமும் 66 லட்சம் பயணிகள் சென்று வருகின்றனர், சுமார் 54 ஆயிரம் தோழர்கள் இக் கழகங்களில் பணியாற்றி வருகிறார்கள்.

கிராமப் பொருளாதாரத்தை உயர்த்தும் வகையில்நாட்டுடைமையாக்கப்பட்ட பேருந்துகள் அங்கு விரிவுபடுத்தப்பட்டன.

1980-ம் ஆண்டு மார்ச்சில் நடந்த கும்பகோணம் மகாமகம், 81-ம் ஆண்டு ஜனவரியில் மதுரையில் நடந்த வரலாற்று சிறப்பு மிக்கஉலகத்தமிழ் மாநாடு மார்ச்சில் சரவண பெலகோளாவில் நடந்த பஹுபலி மகா அபிஷேகம் ஆகியவற்றிற்கு பக்தர்கள் கூட்டத்தை சமாளிக்கும் வகையில் போதுமான பேருந்துகள் விடப்பட்டன

### கல்லணையில்..

முதலாவதாக கல்லணையில் சுற்றுலா வளர்ச்சிக்காக மாவட்ட உல்லாச பயண மையம் சோழன் போக்குவரத்து கழகத்தால் நிறுவப்பட்டு வருகிறது.

சேரன் போக்குவரத்துக் கழகம் பக்தர்கள் நலனுக்காக பழனி கோவிலுக்கு இரண்டு இழுவைரயில்களை வழங்கியுள்ளது.

அதிக வேகமாகப்போவதையும் சாலை விபத்துக்களையும் தடுக்க 3 கோடி ரூபாய் செலவில் போக்குவரத்துக்கழக பஸ்களில் மின்வேக கட்டுப்பாட்டுக் கருவிகள் பொருத்தப்பட்டு வருகின்றன.

விரைவுப் பேருந்துகட்கு வயர்லஸ்கருவிகள் பொருத்தப்பட்டு வருகின்றன.

அனைத்துபோக்குவரத்து கழகங்களிலும் டிரைவர்களுக்கு போதிய பயிற்சி அளிக்கப்பட்டு வருகின்றது.

படித்த இளைஞர்களுக்கு 32 வார ஓட்டுநர் பயிற்சி அளித்து நேரடியாக அரசு போக்குவரத்து கழகங்களில் பணிக்கு அமர்த்தி வருகிறார்கள்.

1980ம் ஆண்டு போக்குவரத்துக் கழக ஊழியர்களின் நிலுவையிலுள்ள ஊதிய உடன்பாடு பற்றி அனைத்து சங்கங்களுடனும் பேச்சுவார்த்தை நடத்தப்பட்டது. அதன்படி ஊதியத்தை மாதத்திற்கு 65 ரூபாய் முதல் 130 ரூபாய் வரை உயர்த்தப்பட்டது.

### மருத்துவ வசதி

அனைத்துப் போக்குவரத்துக் கழகங்களிலும் அகவிலைப்படி, வீட்டு வாடகைப்படி, நகர ஈட்டுப்படி, கிராமப்படி, சுகாதாரப்படி, விடுப்புவசதி, மருத்துவ பயன்கள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

தென் மாநிலங்களில் உள்ள பஸ் கட்டணத்தை விட தமிழகத்தில் பஸ் கட்டணம் மிக மிகக்குறைவாகும்.

கிராம வளர்ச்சிக்காக சேரன் போக்குவரத்துக் கழகம் 20 லட்ச ரூபாயும், போக்குவரத்து வளர்ச்சி நிதிக்கழகம் 10 லட்சரூபாயும், வழங்கியுள்ளன.

முதல்வரின் பொது நிவாரணநிதிக்கு போக்குவரத்து கழகங்கள் 12லட்ச ரூபாய் நன்கொடை அளித்துள்ளன.

ஊனமுற்றோருக்கு வேலை வாய்ப்பளிப்பதில் பல்லவன் போக்குவரத்துக்கழக பெருநகர் பிரிவு முதலிடம் பெற்றுள்ளது.

சேரன் போக்குவரத்துக் கழகம் அந்தமானில் பஸ் போக்குவரத்தை மேம்படுத்த ஆலோசகர்களாக நியமிக்கப்பட்டுள்ளது.

தொழிலாளர்களின் ஒத்துழைப்புடன் வரும் காலத்தில் போக்குவரத்து பணிகளை மேம்படுத்த முடியும் என்ற தன்னம்பிக்கை மிளிர்கிறது.

## நெசவாளர்கள் வாழ்வில் ஏற்றிய தீபம்

கடந்தஓராண்டில் கதர், கைத்தறி, பொதுப்பணித் துறையில் நிறைவேற்றிய சாதனைகள் வருமாறு!

கடந்த 80-ம் ஆண்டில் 600 மில்லியன் மீட்டர் கைத்தறித்துணி உற்பத்தியாகியுள்ளது. தமிழகத்திலுள்ள 5 லட்சத்து 56 ஆயிரம் கைத்தறிகளில் 2 லட்சத்து 55 ஆயிரம் கைத்தறிகள் 1115 தொடக்க நெசவாளர் கூட்டுறவு சங்கங்களின்கீழ் கொண்டு வரப்பட்டன. 25,500 கைத்தறிகள் கூட்டுறவு அமைப்பின் கீழ் கொண்டுவரப்பட்டன.

80—81ம் ஆண்டுமட்டும் 100 மில்லியன் மீட்டர் துணி உற்பத்தி உயர்த்தப்பட்டுள்ளது.

சேலம், கோவையில் 7 லட்ச ரூபாய் செலவில் கோ-ஆப்டெக்ஸ் வடிவமைப்பு நிலையம் துவங்க அனுமதிக்கப்பட்டது.

அரசு எடுத்த நடவடிக்கையினால் வெளியார் முதலாளிகளிடம் வேலை செய்யும் நெசவாளர்களைவிட கூட்டுறவு நெசவாளர் சங்கங்களில் சேர்ந்துள்ள நெசவாளர்கள் தொழில் பாதுகாப்பு பெறு தொடர்ந்து வேலையும் அதிக வருமானமும்பெறும் நிலையை அடைந்துள்ளனர்.

### அதிக ஊதியம்

வெளியாரிடம் பெறும் கூலியைவிட கூட்டுறவு சங்கத்தில் உள்ள நெசவாளர்கள் 30 ரூபாய் முதல் 50 ரூபாய்வரை அதிகம் பெறுகின்றனர். பட்டு கூட்டுறவு நெசவாளர்சங்கத்தில் உள்ளவர்கள் மாதம் 350

(6-ம் பத்தி பார்க்க)

(8-ம் பத்தி தொடர்ச்சி)

ரூபாய் முதல் 400 ரூபாய் வரை அதிகம் பெறுகின்றனர்.

சேமிப்பு, பாதுகாப்பு திட்டத்தின் கீழ் கூட்டுறவு நெசவாளர், கூட்டுறவு சங்க உறுப்பினர் ஒருவா தான் சம்பாதிக்கும் கூலியில் ரூபாய்க்கு 6 காசு வீதம் பிடித்தம செய்யப்படுகிறது. அரசாங்கம் ரூபாய்க்கு 3 காசு வீதம் கொடுக்கிறது. மொத்த சேமிப்பிற்கு 7 சதவிகிதம் வட்டி கிடைக்கிறது.

இதற்கிடையில் உறுப்பினர் இறந்துவிட்டால் அவரது குடும்பத்திற்கு 3 ஆயிரம் ரூபாய் பாதுகாப்புத் தொகை வழங்கப்படுகிறது.

நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள் அனைத்திற்கும் ரிசர்வ் வங்கி, வேலை செய்யும் தறிகளின் அடிப்படையில் பருத்தி தறி ஒன்றுக்கு 2 ஆயிரம் ரூபாய்வீதமும், பட்டுத்தறி ஒன்றுக்கு 2500 ரூபாய் வீதமும் கூட்டுறவு மத்திய வங்கிகள் மூலமாக கடன் தருகிறது.

புதிதாக ஆரம்பிக்கப்படும் பருத்தி நெசவாளர் கூட்டுறவு சங்கங்களில் உறுப்பினராகச் சேர்வதற்கு உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் பங்குத் தொகை கடனாக அரசு 100 ரூபாய் வழங்குகிறது.

புதிய மற்றும் நலிந்து போன கூட்டுறவு சங்கங்களில் அரசு பங்கு மூலதனமாக 25 ஆயிரம் ரூபாய் வரை அளிக்கிறது. நவீன தறி அமைக்க 50சதவிகித கடனும் 50 சதவிகித மானியமும் அரசு அளிக்கிறது.

கடந்த ஆண்டில் மட்டும் கதர்த் துறையின்கீழ் 2760 லட்ச ரூபாய் மதிப்புள்ள கிராமப்பொருட்கள் உற்பத்தி செய்யப்பட்டு அது 2915 லட்சரூபாய்க்கு விற்கப்பட்டன. கிராமத் தொழில் 3 லட்சத்து 77 ஆயிரத்து 200 பேருக்கு வேலைவாய்ப்பு அளித்து வருகிறது.

'பாலிகாதி' தயாரிக்க 9 கூடங்கள் நிறுவ உத்தரவிடப்பட்டது.

கைத்தறி நெசவாளர்கள் வீடுகட்டுவதற்கு 6 ஆயிரம் ரூபாய் கடனுதவி அளிக்கப்படுகிறது.

பொதுப்பணித்துறையில் வேலையில்லா பொறியியல் பட்டதாரிகள் சங்கத்திற்கு அரசின காண்டிராகட் கொடுத்து அவர்களுக்கு வேலைவாய்ப்புக்கு அரசு உத்தரவிட்டுள்ளது.

தூத்துக்குடி மறவன் மடம அருகிலுள்ள அந்தோணியார் புரத்தில் ஒரு கோடி ரூபாய் செலவில பனைபொருள உற்பத்தித் தொழிலகம் துவங்க கதர் கிராமத் தொழில் வாரியம நடவடிக்கை மேற்கொண்டுள்ளது.

# ஓராண்டில் படைத்த உன்னத வரலாறு...

(4ம் பக்கத் தொடர்ச்சி)

ரத்து 275 மாணவர்கள் படிக்க 35 லட்சத்து 35 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டது.

## ஊனமுற்றோர் நலனுக்கு

உடல் ஊனமுற்றவர்களின் படிப்புக்கும் தொழிற் பயிற்சிக்கும் டிசம்பர் மாதம் வரை 331 ஆயிரம் ரூபாய் செலவிடப்பட்டது.

ஊனமுற்றோர் 85 பேர் சிறு கடைகள் வைப்பதற்காக 94 ஆயிரம் ரூபாய் கடன் உதவியளிக்கப்பட்டது.

மதுரையில் உடல் ஊனமுற்றோருக்கு புதுவாழ்வு அளிக்க 2 லட்சத்து 92 ஆயிரம் ரூபாய் செலவில் வட்டார நிலையம் ஏற்படுத்த உத்தரவிடப்பட்டது.

உடல் ஊனமுற்றோருக்கு 600 மூன்று சக்கர வண்டிகளும் காது கேட்கும் கருவி 500ம் வழங்கப்பட்டன.

நன்னிலம், கொடவாசல், திருவாரூர், நாகப்பட்டினம், மன்னார்குடி ஆகிய இடங்களில் கால்நடைகளைப் பாதுகாக்க கேந்திர கிராம வளர்ச்சி வட்டாரம் நிறுவப்பட்டது.

## ஆடு, கோழி வளர்ப்பு

ஒரத்தநாடுமாவட்டகால் நடைப்பண்ணையில் 37லட்சத்து 15 ஆயிரம் ரூபாய் செலவில் முர்ரா காளை வம்சா வழி ஆய்வுத் திட்டம் செயலாற்ற அனுமதிக்கப்பட்டுள்ளது.

ஆடுகளின்பெருக்கத்தை அதிகரிக்க 96 ஆயிரத்து 184 ஆடுகளுக்கு குடற்புழு நீக்கப்பட்டுள்ளது.

சேலம் மாவட்டத்திலுள்ள அலங்காநத்தம், திருச்சிமாவட்டத்திலுள்ள முசிறி ஆகிய இடங்களில் கோழிவளர்ப்போர் சங்கம் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

சென்னை மாதவரத்தில் நவீன இறைச்சிக் கூடம் கட்டுவதற்கு 150 ஏக்கர் நிலம் தேர்ந்தெடுக்கப்பட்டது. அரசின் பங்குத் தொகையாக 35 லட்ச ரூபாய் நவீன இறைச்சிக் கூடம் அமைக்க அளிக்கப்பட்டுள்ளது.

19 லட்சத்து 66 ஆயிரம் ரூபாய் செலவில் 1912 ஆடு வளர்ப்பு நிலையங்கள் துவங்கப்பட்டன.

கால்நடை மராமரிப்புத் துறையின் மூலம் சேலம், வட ஆற்காடு, திருநெல்வேலியில் ஆடு உற்பத்தி திட்டம் செயல்படுத்தப்பட்டது.

கோழி வளர்ச்சி நிறுவனத்தின் மூலம் சேலம், வட ஆற்காடு, மதுரை செங்கற்பட்டு ஆகிய இடங்களில் கோழி உற்பத்தி செய்யப்பட்டது.

சிறு விவசாயிகளுக்கு 71 லட்சத்து 66 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 11 ஆயிரத்து 343 கறவை மாடுகளும் 2 லட்சத்து 43 ஆயிரம் ரூபாய் செலவில் 364 உழவு மாடுகளும் வழங்கப்பட்டன.

# வறட்சியை தடுத்து வாட்டம் போக்கினேம்

அண்ணாவின் அரசு இரண்டாம் முறையாக அமைந்த ஓராண்டு நிறைவை ஒட்டி விவசாயத்துறை அமைச்சர் கா. காளிமுத்து 'அண்ணா' நிருபருக்கு அளித்த சிறப்பு பேட்டியில் கூறியதாவது:-

தமிழகத்தில் வேளாண்மைக்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டுள்ளது. தமிழகவேளாண் பெருமக்களின் வாழ்வு மலர தமிழக அரசு கடந்த ஆண்டு பல திட்டங்களை செயலாற்றியுள்ளது.

80-81ம் ஆண்டு விளை பொருள் உற்பத்திக்கு பாதகமாக இரு பருவ மழை பொய்த்து பெரும் இன்னலுக்கு வேளாண் மக்கள் ஆளாயினர். ஆயினும் தமிழக அரசு உடனுக்குடன் எடுத்த நிவாரணப் பணிகளால் அவர்களின் துயர் பெருமளவு தீர்க்கப்பட்டது.

கடந்த ஆண்டில் 2 லட்சத்து 86 ஆயிரம் டன்கள் தழைச் சத்தும் 85 ஆயிரம் டன்கள் மணிச்சத்தும், ஒரு லட்சத்து 9 ஆயிரம் டன் சாம்பல் சத்துமுள்ள ரசாயன உரங்கள் விவசாயிகளுக்கு வழங்கப்பட்டன.

## தரமான மருந்து

தரமானபூச்சி, பூஞ்சாண கொல்லி மருந்துகள் கட்டுப்பாட்டு விலையில் 288 லட்சம் ரூபாய்க்கு வழங்கப்பட்டது.

பருவகால ஆரம்பத்தில் மேற்கு கரையோரத்தில் பெய்த நல்ல மழையின் காரணமாக மேட்டூர் அணை குறிப்பிட்ட காலத்தில் திறந்துவிடப்பட்டு நல்ல குறுவை அறுவடைக்கு வழிவகை செய்யப்பட்டது.

கோவில்பட்டி 2 பனிவரகு, ஆடுதுறை 3 உளுந்து திண்டிவனம் 4 ஆமணக்கு. கோ. க.8001, கரும்பு பயிர்கள் வெளியிடப்பட்டன.

கரும்பின் கொள்முதல் விலை ஒரு டன் 130 ரூபாயாக நிர்ணயம் செய்யப்பட்டது. உற்பத்தியாளர்களுடன் கலந்து ஆலோசித்து கூட்டுறவு ஆலைகள் மூலம் டன் ஒன்றுககு 175 ரூபாய் கிடைக்க ஏற்பாடுசெய்யப்பட்டது.

தென்னை உற்பத்தியின் அவசியம் கருதி 15 லட்சம் நெட்டை தென்னங்கன்றுகளும் 3 லட்சம் நெட்டை குட்டை வகைகளும் 4 லட்சம் குட்டை நெட்டை வீரிய கன்றுகளும் வழங்குவதற்கு 30 ஹெக்டரில் புதிய நாற்றங்கால் துவங்க திட்டமிடப்பட்டு உள்ளது.

## உழவர் பயிற்சி நிலையம்

பெரியார் மாவட்டத்தில் உழவர்களுக்கு விரிவாக்கப்பணி பயிற்சியளிக்க ஒரு உழவர் பயிற்சி நிலையம் அமைக்கப்பட்டது.

புதுக்கோட்டை மாவட்டம் குடுமியான் மலையில் ஒருமண் பரிசோதனை ஆய்வுக்கூடம் அமைக்கப்பட்டது.

வறட்சிக்கு இலக்காகும் பகுதிக்கான திட்டத்தின் மற்றும் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின கீழும் காஞ்சிபுரம், மேலாத்தூர், கடலூர், குடுமியான்மலை, திருச்சி, மதுரை, பரமக்குடி, அருப்புக்கோட்டை, நாகர்கோயில், கோவை, உதகமண்டலம், சேலம், தருமபுரி ஆகிய இடங்களில் உழவர்களுக்கு உதவிடும் வகையில் 13 இயங்கும் மண் ஆய்வுக் கூடங்கள் செயல்படுத்தப்பட்டன.

வேளாண் பொறியியல் பணியினை மேலும் சிறப்பாக்க செயலாக்கும் வகையில் வேளாண் பொறியியல் துறை தனியாக செயல்பட்டு இயங்கி வருகிறது.

## நான்கு பிரிவுகள்

எண்ணை வித்துக்களைத் தமிழகத்தில் அதிகமாகப் பயிரிட வேண்டிய வசதிகளை செய்யும் முறையில் எண்ணை வித்துக்கள் இயக்கம் துவங்கப்பட்டுள்ளது.

மதுரை மாவட்டம் சிறுமலையில் பெரிய பழத்தோட்டம் 2 லட்ச ரூபாய் செலவில் அமைக்க அனுமதியளிக்கப்பட்டுள்ளது.

வேளாண் விற்பனைத் துறையில் சிறந்த முறையில் பிரச்சாரம் செய்யும் வகையில் 4 மண்டலங்களில் 5 லட்சத்து 34 ஆயிரம் ரூபாய் செலவில் பிரிவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

உதகைஅரசினர் தோட்டம், குன்னூர் சிம்ஸ் பார்க் ஆகியவை 2 லட்சத்து ரூ. 5 ஆயிரம் செலவில் புதுப்பிக்கப்பட்டன.

திருப்பூர், கரூர், திருநெல்வேலி, விருதுநகர் சேலம் ஆகிய இடங்களில் அக்மார்க் தர பரிசோதனை நிலையங்கள் துவக்க 5 லட்ச ரூபாய் அனுமதி அளிக்கப்பட்டுள்ளது.

காஞ்சிபுரத்தில் "நவ்லாக்" உழவர் பயிற்சி நடத்தப்பட்டு விவசாயிகளுக்கு 12 தொலைகாட்சிப் பெட்டிகள் அளிக்கப்பட்டுள்ளன.

## முந்திரி அபிவிருத்தி

உலகவங்கி உதவியுடன் முந்திரி அபிவிருத்திக்காக 49 கோடி ரூபாய்செலவில் திட்டம் தீட்டப்பட்டு மத்திய அரசின் ஒப்புதலுக்கு அனுப்பப்பட்டுள்ளது.

ஒழுங்கு முறைவிற்பனைக் கூடத்தை விரிவு படுத்த 101 கோடி ரூபாய் உலக வங்கி உதவி பெறும் திட்டம் மத்திய அரசுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

விவசாயிகளின் நன்மையைக் கருதி பயிற்சியும் பார்வையிடுதலும் என்ற திட்டம் 29 கோடி ரூபாய் செலவில் 1.7.81 முதல் துவக்கப்பட இருக்கிறது.

குஜராத் 'ஆனந்த்' பாணியில் எண்ணைவித்துக்கள் பயிரிட கூட்டுறவு சங்கம் அமைத்து அதிகமாக உற்பத்தி செய்யத் திட்டம் மேற்கொள்ளப்பட இருக்கிறது.

வறட்சிப் பகுதிகளில் உள்ள விவசாயிகளுக்கு தரமான விதைகள் வழங்குவதற்காக 2500 டன் விதைகள் 30 லட்ச ரூபாய் செலவில் வாங்கி சேமித்து வைக்கப்பட்டுள்ளன.

# உற்பத்தி பெருக உன்னத திட்டங்கள்

நீர்ப்பாசனத்துறை கடந்த ஓராண்டில் செய்திருக்கும் சாதனைகள் வருமாறு:-

பரம்பிக்குளம் - ஆளியாறுதிட்டம், 66 கோடியே 72 லட்சம் ரூபாய் செலவில் பாசனப்பகுதி முடிக்கப்பட்டு 2 லட்சத்து 53 ஆயிரம் ஏக்கர் நிலத்திற்கு பயனளித்து வருகிறது.

தமிழ்நாட்டில் ஒரு சில பெரிய நதிகளே உள்ளன. அவைகளும் முழுமையாக பயன்படுத்தப்பட்டுள்ளன ஏற்கனவே உள்ள ஆற்று நீர்ப்பாசனத் திட்டத்தில் பல மிகப் பழைமையானவையாகும்.

சிறப்பு சிறுபாசனத் திட்டத்திற்காக 200 லட்ச ரூபாயும் தூர்வாரி புனரமைப்பதற்காக 10 லட்ச ரூபாயும் ஒதுக்கப்பட்டன.

## சிறுபாசன திட்டம்

14 புதிய சிறப்பு சிறுபாசனத்திட்டங்களுக்கு 2 லட்சத்து 19 ஆயிரம் ரூபாய்க்கு அரசு ஒப்புதல் அளித்திருக்கிறது.

பரம்பிக்குளம்ஆளியாறு ஆயக்கட்டு விஸ்தரிப்பு திட்டத்தின் ஒரு பகுதி மூலம்புதிதாக 11 ஆயிரத்து 100 ஹெக்டேர் நிலங்கள் பயனடையும் வகையில் பாசன வசதி உருவாக்கப்பட்டுள்ளது.

இப்போது நடைபெற்று வரும் திட்டங்கள் வருமாறு:

மதுரை ராமநாதபுரத்தில் பெரியாறு வைகை கால்வாய்களை நவீனப்படுத்துதல்.

வட ஆற்காடு, தென் ஆற்காட்டில் சாத்தனூர் மேல்மட்ட அணைக்கட்டிலிருந்து வலதுபுற கால்வாய் 465 லட்ச ரூபாயில் வெட்டுதல்.

திருநெல்வேலியில் குண்டாறு 82 லட்ச ரூபாயில் சீரமைத்தல்.

தருமபுரியில் கெலவரப்பள்ளி 606 லட்சத்து 65 ஆயிரம் ரூபாய் செலவில சீரமைத்தல்.

தென்னாற்காட்டில் வீராணம் ஏரி கால்வாயை 11 லட்ச ரூபாயில் மேம்படுத்தும் முன்னோடித்திட்டம்.

திருநெல்வேலியில் சேர்வலாற்றை 511 லட்சரூபாயில் சீரமைத்தல்.

மதுரையில் குடகனாற்றை 1090 லட்சரூபாய் செலவில் சீரமைத்தல்.

தஞ்சாவூர் கால்வாய்க் கரையைச் சீரமைத்தல்.

## நீர் தேக்கபணிகள்

கோவை, பெரியாரில் பாம்பிக்குளம் ஆயக்கட்டு 1400 லட்சரூபாயில் விரிவுபடுத்துதல்.

தர்மபுரியில் தும்பலஹள்ளி நீர்தேக்கத்தை 205 லட்ச ரூபாயில் கட்டுதல். வாணியாறு நீர்தேக்கத்தை 860 லட்ச ரூபாயில் கட்டுதல். ராமநாதபுரத்தில் வெம்பக்கோட்டை நீர்த்தேக்கம், குள்ளூர் சந்தை நீர்த்தேக்கம் கட்டுதல்.

மதுரையில் பெரியாறு நீர்த்தேக்கம் 179 லட்ச ரூபாயில் வலுப்படுத்துதல் பி. டி. ராஜன கால்வாயிலிருந்து 48 லட்சத்து 53 ஆயிரம் ரூபாய் செலவில் சம மட்ட கால்வாய் அமைப்பது.

இதுபோன்ற மொத்தம் 396 கோடியே 66 லட்சத்து 98 ஆயிரம் ரூபாய்க்கான திட்டங்கள் செயல்படுத்தபட்டுவருகின்றன.

திருச்சி மாவட்டம உப்பாறு நீர்த் தேக்கம், சித்தமல்லி நீர்த்தேக்கம், தாமபுரி மாவட்டம் சூலகிரி-சின்னாறு நீர்த்தேக்கம், கன்னியாகுமரி மாவட்டம் அனந்தனாறு கால்வாய் சீரமைக்கும திட்டம் ஆகியவற்றை மொத்தம் 671 லட்ச ரூபாய் மதிப்பீட்டில் செயலாக்கவும் அரசு அனுமதி தந்திருக்கிறது.

---

தி. நகர் வட்ட

## நிர்வாகிகளுக்கு பாராட்டுக் கூட்டம்

சென்னை, ஜூன் 9. சென்னை 113-வது வட்டம் சார்பாக தி.நகர் தொகுதி வட்டகழகநிர்வாகிகளுக்கு பாராட்டுக் கூட்டம் நாளை 10-ந்தேதி (புதன்கிழமை) மாலை 6 மணி அளவில் எம்.ஜி.ஆர் நகர் நூறு அடி ரோடில் வி. செல்வமணி தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் சட்ட அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகிறார். மற்றும் புலவர் அறிவுடைநம்பி, பா. வளர்மதி, அப்துல் ரசாக் எம்.எல்.ஏ., தி.நகர் மூர்த்தி, கு. க. செல்வம், கிருஷ்ணன், கோவிந்தசாமி, தேவராசன், மணியன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர்.

---

இலங்கைத் தமிழர் மீது நடக்கும் அடக்குமுறையைக் கண்டித்து 10-ந்தேதி

# மக்கள் சார்பில் சர்வகட்சிக் கூட்டம்: ஷெரீப் கூட்டுகிறார்

சென்னை, ஜூன் 9 இலங்கை தமிழர் மீது ஏவி விடப்பட்டு இருக்கும் அடக்குமுறையைக் கண்டித்து சென்னை நகரில் அனைத்துக் கட்சிகள் கூட்டம் நடைபெறுகிறது.

சென்னை நகர ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் ஏற்பாடு செய்துள்ள இந்தக் கூட்டம் இம்மாதம் 10ம் தேதி மாலை கலைவாணர் அரங்கில் நடைபெறுகிறது.

இலங்கைத் தமிழர் மீது அடக்குமுறை ஏவப்பட்டு கொடுமைகள் இழைக்கப்பட்டு வருகிறது. இதில் 20க்கும் மேற்பட்ட தமிழர்கள் கொல்லப்பட்டு இருக்கிறார்கள்.

இதைக்கண்டித்துசென்னை நகர மக்கள் சார்பில் அனைத்துக் கட்சி கூட்டத்தை நகர ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் ஏற்பாடு செய்துள்ளார்.

கலைவாணர் அரங்கில் 10-ம் தேதி மாலை நடைபெறும் இந்தக் கூட்டத்திற்கு ஷெரீப் தலைமை வகிக்கிறார்.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி, அர்ஸ்காங்கிரஸ், ஜனதாக் கட்சி, காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ், காமராஜ் காங்கிரஸ், தமிழ்நாடு முஸ்லிம்லீக், இளைஞர் முஸ்லிம்லீக், அம்பேத்கார் இயக்கம், குடியரசுக்கட்சி (கவாய்ப்பிரிவு), ஆகிய கட்சித் தலைவர்கள் இந்தக் கூட்டத்திற்கு அழைக்கப்பட்டு இருக்கிறார்கள்.

இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளுமாறு மேலவைத்தலைவர் சிலம்புச்செல்வர் டாக்டர் ம. பொ. சி., பேரவைத் தலைவர் க. ராசாராம் ஆகியோரும் அழைக்கப்பட்டுள்ளனர்.

## திரண்டு வருக

இலங்கைத் தமிழர்க்கு இழைக்கப்பட்டு வரும் அநீதியைக் கண்டிக்கவும் தமிழக மக்களது உணர்ச்சியை வெளிப்படுத்தவும் கூட்டத்திற்கு கடலெனதிரண்டுவருமாறு ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் கேட்டுக் கொண்டுள்ளார்.

---

கு.க. செல்வம் தலைமையில்

## அமைச்சர் முத்துசாமி வெளியிடும் புதிய ஏடு

சென்னை, ஜூன் 9. சென்னை மாவட்ட கழகத் துணைச்செயலாளர் கு. க.செல்வம் தலைமையில் 'டார்ஜான் பறக்கும் படை' என்ற புதிய மாத மிருமுறைப்பத்திரிகையை அமைச்சர் முத்துச்சாமி வெளியிடுகிறார்.

இதற்கான விழா நாளை (10-ந் தேதி) மாலை வட பழனி சிங்காரவேலர் திடலில் நடைபெறுகிறது.

---



## விற்பனையாளர்களுக்கு

மே மாத பட்டியல் தொகையை இதுவரையில் அனுப்பி வைக்காத ஏஜண்டுகள் அனைவரும் உடனடியாக முழுத் தொகையையும் பாக்கியின்றி அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். தொகை அனுப்பாத ஏஜண்டுகளுக்கு 15-6-81 முதல் பிரதிகள் அனுப்புவது நிறுத்தப்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

விநியோக நிர்வாகி
அண்ணா

**ச ந் தா  வி வ ர ம்**

1 வருடச் சந்தா தொகை ரூ. 145
6 மாதச் சந்தா தொகை ரூ. 74
3 மாதச் சந்தா தொகை ரூ. 37

3 மாதத்திற்குக் குறைவான சந்தாத் தொகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

நிர்வாகி:

**"அ ண் ணா"**

34. நெல்சன் மாணிக்கம் சாலை,
அமைந்தகரை, : : சென்னை-29


# அண்ணா



## எம். ஜி. ஆர். மன்ற மாநாடு: நகரை உலுக்கும் பிரமாண்ட ஊர்வலம்

**சேலம், ஜூன் 9. சேலத்தில் நடக்க இருக்கும் புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்ற மாநாட்டையொட்டி பிரமாண்டமான ஊர்வலம் நடைபெறவுள்ளது.**

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன் கூறியதாவது:

மாநாட்டின் தொடக்க நாளான 13-ந்தேதி சேலம் உடையாபட்டியிலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்படுகிறது.

இந்த ஊர்வலத்தில் 200க்கும் மேற்பட்ட அலங்கார வண்டிகள் வருகின்றன.

### ஊர்வலப் பாதை

சேலம்அம்மாப்பேட்டை முக்கியசாலை சின்னக்கடை பஜார், வள்ளுவர்சிலை, ராஜாஜி சிலை, கோட்டை முக்கியசாலை, அப்சரா தியேட்டர், நியூசினிமா தியேட்டர், காந்திசிலை, அண்ணாசிலை வழியாக மாநாட்டை அடையும்.

மாநாட்டுப் பந்தலில் கடலூர் ஜனார்த்தனம் கழகக்கொடியை ஏற்றி வைப்பார்.

மாலை 5 மணிக்கு சட்ட மன்ற உறுப்பினர் நவரசம் ஜி. கே. எஸ். கலை நிகழ்ச்சியுடன் மாநாடு தொடங்குகிறது. மாநாட்டுத் தலைவரின் தலைமையுரைக்குப்பின் கோவை புறநகர் எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் லியாகத்அலிகான் மாநாட்டைத் திறந்து வைத்து சிறப்புரை ஆற்றுகிறார்.

மாஜிமதுரை ராசேந்திரன், தியாகிகள் பூலாவரி சுகுமாரன், வத்தலக்குண்டு ஆறுமுகம், மதுராந்தகம் அகமதுபாட்சா ஆகியோரின் உருவப்படங்களைத் திறந்து வைத்துப் பேசுகிறார்.

அதன் பின்னர் கழக முன்னணியினர் சிறப்புரையாற்றுகின்றனர். இறுதியில்மக்கள் நல்வாழ்வுத் துறைஅமைச்சர் ஹண்டே நிதியமைச்சர் டாக்டர் நாவலர் ஆகியோர் உரையாற்றுகின்றனர்.

இரவு 10 மணிக்கு திரை இசையமைப்பாளர் கங்கை அமரனின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெறுகிறது.

### 2-ம் நாள் நிகழ்ச்சிகள்

14ந்தேதி காலையில் பல குரல் மன்னன் சிவகங்கை சேதுராசனின் கலைநிகழ்ச்சியுடன் இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் தொடங்குகின்றன.

மாநாட்டு வரவேற்புக் குழுச் செயலாளர் திருச்சி சௌந்தரராசன் வரவேற்புரை நிகழ்த்துகிறார்.

தொடர்ந்து முன்னணியினர் சொற்பொழிவாற்றுவார்கள்.

பிற்பகல் 3 மணிக்கு நெல்லை கலையரசி—மாலதி டேப் நடராசன் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. கழகத் தலைவர்களின் சிறப்புரைக்குப் பின்னர்பொதுசெயலாளர் ப.உ.ச. உரையாற்றுகிறார்.

இறுதியில் மாநாட்டின் சிறப்புக்கு முத்தாய்ப்பு வைத்தாற்போல புரட்சித் தலைவர் பேசுகிறார்.

இரவு 10 மணிக்கு அரசு நர்த்தகி சுவர்ணமுகியின் நடனநிகழ்ச்சி நடைபெறுகிறது.

இவ்வாறு முசிறிபுத்தன் கூறினார்.

மேலும் அவர் கூறியதாவது:

அனைத்துலக எம்.ஜி.ஆர் மன்றத் தலைவர் முசிறிப்புத்தனும், செயலாளர் சௌந்திரராசனும் சேலத்திலேயே தங்கி ஏற்பாடுகளை மும்முரமாகக் கவனித்து வருகிறார்கள்.

### தீவிரப்பணி

அனைத்துலகஎம்.ஜி.ஆர் மன்ற பொருளாளர் வரதராசன், சேலம் வழக்கறிஞரும் மாவட்ட செயலாளருமான பி.கண்ணன், மாவட்ட துணைச் செயலாளர் ரகுமான், நிர்வாகக் குழுத் தலைவர் ராஜா, சட்டமன்ற உறுப்பினர் கே.பி. ராமலிங்கம், சேலம் ஆறுமுகம், சேலம் நகரசெயலாளர் எஸ். பி. அங்கமுத்து, சொக்கலிங்கம் ஆகியோரும் களத்தில் தீவிரப் பணியாற்றி வருகிறார்கள்.

தொண்டர்படைத் தலைவர் சட்டமன்ற உறுப்பினர் ஐ. கணேசன் ஊர்வலத்தை ஒழுங்குபடுத்தி மாநாட்டுப்பந்தலில் மக்களைச் சீர்படுத்துவார்.

மாநாட்டுச் சிறப்பினையும் மாண்பினையும் மாற்றாரும் உணரும் வகையில் சென்னை ஒர்க்கர்ஸ் கம்பைன்ஸார் திரைப்படமாக எடுக்கிறார்கள்.

மாநாட்டுப் பந்தலில், நிகழ்ச்சிகளை அனைவரும் காணும்வகையில் 15 க்கும் மேற்பட்ட தொலைக்காட்சி பெட்டிகள் வைக்கப்படுகின்றன.